# இளங்கோ உள்ளம்




எழுதியவர் :

ஆ. ஜெபரத்னம், எம். ஏ.,

தமிழ்ப் பேராசிரியர், புனித யோவான் கல்லூரி,

பாளையங்கோட்டை.



M. சேஷாசலம் அண்டு கம்பெனி

7, சுங்குராம செட்டித் தெரு : : சென்னை-1

பதிப்புரிமை] 1956 [விலை ரூ. 1-12-0

முதற் பதிப்பு—1954
இரண்டாம் பதிப்பு—1956

The Hindu—dated 13-6-'54

'......Mr. Jebaratnam's approach to the subject is brilliant and scholarly.........

Text book in UNIVERSITY OF MYSORE
ANNAMALAI UNIVERSITY
MADRAS UNIVERSITY.




Kabeer Printing Works, Madras (3312)

# முகவுரை

மலரை நோக்கி விரையும் வண்டு, முதலில் தன் வயிற்றுப் பசியைத் தணிப்பதற்குரிய உணவினை நாடியே செல்கிறது. அதன் நற்பேறு, வண்ண வண்ண மலர்கள் நல்கும் முருகு மதுவுணவு, அதற்கு உண்ண உண்ணத் தெவிட்டாத தீஞ்சுவை அமுதமாக இருக்கின்றது! எனவே, அது மலரைச் சூழ்ந்து சூழ்ந்து பாடி, அம்மலர் அமளியிலேயே தங்கிக், காதலும் புரிந்து கண்ணும் வளர்ந்து, அங்கேயே வாழ்க்கையும் நடத்தத் தொடங்கி விடுகிறது.

உலகிலே தமிழுக்கு முதலிடமோ தனியிடமோ வேண்டுவதில்லை. ஆனால், தான் பிறந்த நாட்டிலே, தன் வீட்டிலே அது முதன்மை இழந்து நிற்பதைக் காணத் தமிழர் மனம் கண்ணீர் வடிக்கின்றது. இந்த அவல நிலையிலும், தேனுண்டு வாழும் திருவாழ்வு வண்டினத்துக்கு மட்டும் வாய்த்ததுபோல, தமிழன்னையின் தவப்புதல்வர்களாகிய இளங்கோ முதலிய புலவர் பெருமக்களின் கவிதைத் தொகுப்பு தமிழ் கற்கும் தனிப்பேறு பெற்றார்க்கு ஆரமுதமாய்க் கிடைத்துள்ளது.

இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம், சில சமயங்களில் கபிலர், கம்பர் போன்றாரைக் காட்டிலும் தமிழர் மனத்தைக் கவரும் தனித்தகைமையுடையதாகி விடுகிறது. என்மனம் கவர்ந்த புலவர் மணிகளுள்

இளங்கோவும் ஒருவர். படிக்கப்படிக்கப் பற்றுமிகும் பான்மையுடையனவாக, அவர்தம் அருமைக் கருத்துக் களும் அமுதச்சுவைக் கவிதைகளும், என்னை என்றும் அவர்பால் இறுகப் இறுக பிணிக்கின்றன. என்னெடு பயின்றுவரும் தமிழ்ப் பேராசிரியர்களாகிய என் அருமை நண்பர்கள், இளங்கோபால் நான் பெறும் இன்பக் களியை இக்காலத் தமிழ் இளைஞரோடு பாத்துண்ணு மாறு பணித்த பணியாக இச்சிறு நூலை இயற்றி யுள்ளேன்.

ஒரு புலவனையோ, அன்றி ஒரு பாட்டையோ உரை விளக்கமாகிய குறுக்கீடின்றி, நேர் முகமாகத் தெரிதலே சுவையறி தனிமுறை என்னும் கருத்துடைய எனக்கு இச்சிறு பணியினைத் திறம்படச் செய்துவிட்டதாகச் செருக்கு இல்லை. 'குலம்தரு வான்பொருட் குன்றம்' ஆகிய தமிழ்ச் செல்வத்தை ஒரு புது முறையில் துய்க்கும் எனது துணிவினைச் சான்றேர் பொறுக்குமாறு வேண்டு கின்றேன். புலவன் உள்ளமும், அவன் படைக்கும் பாத் திரங்களின் இயல்பும் அறிந்து காவியங்களைப் படிக்கப் பயிற்றுவிக்கும் தூண்டுகோலாக இளைஞர்க்கு இந்நூல் பயன்படுமாறு பொறுப்புடைய மேலோர் செய்வராயின், அது தமிழன்னைக்கு யான் செய்யும் இச்சிறு சேவையில் அவர்கள் என்னை ஊக்கியதாகும்.

ஏற்கெனவே இப்பணியில் என்னை ஊக்கிய எல்லா நண்பர்கட்கும், முக்கியமாக எங்கள் கல்லூரி ஆணைத் தலைவரவர்களாகிய உயர்திரு. J. வேதசிரோமணி M.A., B.L. அவர்கட்கும், எங்கள் நகர்ப் புனித சவேரியர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் திரு ஆ. அருளப்பன்

B.A. அவர்கட்கும், நான்காண்டுகளாக என் பெட்டி யடியிற் சிறைவாசம் செய்த இக்கையெழுத்துப் படியினை மீட்டு அழகிய இனிய அச்சுருக்கொடுத்த அன்பர் M. N. ராவ் M.A. அவர்கட்கும் நிறைமிகு நன்றி என்றும் உடையேன்.

என் முயற்சியைப் பாராட்டி இந்நூலுக்குக் கருத்துரை வழங்கியுதவிய தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு. டாக்டர். மு. வரதராசனுர் M.A., M.O.L., PH.D. அவர்கட்கு என் மனமார்ந்த நன்றி உரியது. அவர்கட்கு யான் என்றும் கடப்பட்டுள்ளேன்.

தமிழினையும் தவருது கற்றுத் தமிழர் வாழ்க!

19–2–54. ஆ. ஜெபரத்னம்.

# கருத்துரை

சிலப்பதிகாரம் பழந்தமிழ் மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு தமிழ் நாட்டில் தமிழ் மொழியில் எழுந்த முதல் காவியம். அறிவு வளர்ச்சிக்கும் அன்பு வளர்ச்சிக்கும் இடையூருகிய பற்றுக்களைத் துறந்த துறவியார் இளங்கோவடிகள் தமிழர்தம் அறநெறியைக் காக்கும் அரிய நோக்கம் கொண்டு இக் காவியத்தை இயற்றியருளினுர். இத்தகைய சிறந்த நூலை ஒவ்வொருவரும் கற்றுணர்தல் கடமையாகும். கற்று உணர்வதோடு அமையாமல், தாம் உணர்ந்தவற்றைப் பிறர்க்கு உணர்த்தவும் வல்லவராயிருப்பவர் இதுபற்றி ஆராய்ச்சி நூல்களை எழுதி வெளியிடுதலும் கடமையாகும். கடல், நாள்தோறும் பல்லாயிரமக்களால் கண்டு களிக்கப் படுகிறது. காண்பவர் அனைவர்க்கும் ஒரே வகையான அனுபவம் வாய்ப்பதில்லை. காவியம் கற்பவர்க்கும் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருவகை அனுபவம் ஏற்படுகிறது. அவரவர் நுகர்ந்த இலக்கியச் சுவையைப் பிறரும் துய்க்கும் வகையில் ஆக்கி அளித்தல் நல்லதொரு கலைத்தொண்டாகும். பிற சுவைகள் நுகர்பவருடன் மாயும்; கலைச்சுவையோ, நுகர்பவரின் அனுபவத்தால்

மேன்மேலும் மிக்கு விளங்கும். ஆதலின் சிலப்பதிகாரத்தைப் பெற்றுப் பெருமிதமுறும் தமிழகம், இது பற்றிய ஆராய்ச்சி நூல்களையும் பற்பலவாகப் பெற்றுப் பொலிவுறல் வேண்டும்.

திருநெல்வேலித் தமிழறிஞர் திருவாளர் ஆ. ஜெபரத்னம் இத்துறையில் தொண்டாற்ற முனைந்தது போற்றத் தக்கது. அவர் சிலப்பதிகாரத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்தவர்; இளங்கோவடிகளிடம் மிக்க ஈடுபாடு உடையவர். அவர்தம் ஆராய்ச்சி நூலாக வெளிவரும் 'இளங்கோ உள்ளம்' என்னும் இந்நூல் இதற்குச் சான்றாகும்.

ஆசிரியரின் உள்ளம் இளங்கோவடிகளிடம் ஈடுபட்டுள்ள அளவிற்கு, பத்தினித் தெய்வமாகிய கண்ணகியிடமும் ஈடுபாடு கொண்டுள்ளது. கண்ணகியை இளங்கோவடிகள் எவ்வெவ்விடங்களில் எவ்வெவ்வாறு போற்றியுள்ளார் என ஆராய்வது தனியின்பமாகும். "தென்தமிழ்ப் பாவை செய்த தவக் கொழுந்து" என்றும், "ஒரு மாமணியாய் உலகிற் கோங்கிய திருமாமணி" என்றும் அடிகள் பாராட்டும் காரணத்தை நுணுகி ஆராய்ந்து ஆசிரியர் இந்நூலில் விளக்கியுள்ளார். 'பெண்ணுள்ளம் கண்ட பேருள்ளம்' என்ற மூன்றாம் பகுதி சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தது.

"பெண்ணை இகழ்ந்து மக்கள் வாழ்வை அழிக்கச் சூழ்ந்த சதிக்கெதிரே ஒழுக்கம் வகுக்கப் புகுந்தார்" (பக்கம்-49) என்று ஆசிரியர் கூறும் கருத்து உளமுவந்து

போற்றத்தக்கது. அதை அவர் பலவிடத்தும் தெளிவுற விளக்கிச் செல்வது நல்விருந்தாக உள்ளது.

ஆயின் அதைத் தொடர்ந்து, “பெண்ணின் கடவுட்டன்மையை நிறுவப் புகுந்த புதுப்பணியில், அவளை ஒட்டிய களவென்னும் மாசினையும் புடைத்துத் தள்ளிவிட்டார்” (பக்கம்-49) என்றும், “களவு பெண்ணின் பெருமைக்கு இழுக்கென்பதே அவர் முதற்கண் காட்டும் புதுநெறி; புதுநெறியன்று, அவர் புதுக்கிக் கொடுத்த தமிழ்த்தொன்னெறியாகும்” (பக்கம்-31) என்றும் கூறும்போது ஆசிரியருடன் உடன்பட இயலவில்லை. பெண்ணின் பெருமைக்கு இழுக்குத்தேடும் வகையில் முனைந்த சில சமயங்களைக் கடிந்து, அவற்றின் செயல், “நோயை ஒழிக்காது நோயாளியையே ஒழிக்கும் முயற்சியாயிற்று” என்கிறார் (பக்கம்-66). இந்த அளவிற்கு இக் கருத்து ஏற்கத் தக்கதாகும்.

அறிவும் அறமும் மட்டும் ஒரு நாட்டுக்குப் போதா என்றும், கவிதையும் இன்றியமையாதது என்றும் ஆசிரியர் சுட்டிச் செல்வது போற்றி மகிழத்தக்க குறிப்பாகும். இளங்கோவடிகள் காட்டையணுகிக் கடுந்தவம் புரிந்த துறவியல்லர் என்றும், தமிழ் தமிழ்நாடு தமிழன் தமிழ்ப்பண்பாடு இவற்றில் பற்று நிரம்பிய துறவியார் என்றும் துணிவுகொண்டு எடுத் துரைப்பது, புதிய கொள்கையாகும்; ஆயினும் அன்பு நெறியில் நின்று வாழ்க்கையை ஆராய்வோர் அனைவரும் உளமுவந்து பாராட்டும் கொள்கை அதுவே. கால தேவன், தமிழ்க் குடும்ப அறத்தைச் சிதைக்கத்

தொடங்கியபோது இளங்கோவடிகள் (கண்ணகிபோல்) சீறியெழுந்து போர் தொடுத்தார் என விளக்கும் பகுதியும் அறிவுக்கு விருந்தாக அமைந்துள்ளது. காவியத்தில் அமைந்துள்ள அற்புத நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ள அமைதிகளும் ஆராய்ச்சிக்கு உரிய நயம் பொருந்தியுள்ளன.

ஆசிரியரின் தமிழ்த்தொண்டு இந்நூலின் வாயிலாக மேன்மேலும் வளர்ந்து ஒளிர்வதாக.

மு. வரதராசன்.

# பொருளடக்கம்

மதுரை ... திருமங்கலம் அவ்வை தி.க. சண்முகநாதம் தமிழ்ப்...

# இளங்கோ உள்ளம்

## 1. தமிழ் மரபு கண்ட தனித்தமிழ் உள்ளம்

### I

மாநிலம் புரந்த மன்னர் ஒருவர் தவத்தின் தனி வன்மையை உணர்ந்து, தம் அரசினைத் துறந்து கடுந்தவம் புரிந்தார். அவருடைய தவ வேகத்தினைக் கண்டு அஞ்சிய அமரர்கோன் அதனைக் குலைக்கும்படி அவரிடம் மேனகையை அனுப்பிவைத்தான். உண்ணுமல் குடியாமல், நீரிலும் நெருப்பிலும் நின்று அவர் ஆற்றிய அருந்தவம் அப்பெண்ணின் மலரடியில் விழுந்து மண்ணுயிற்று. எல்லாம் வென்ற முனிவர் பெண்மையை வெல்லும் வலி இல்லாது எளியர் ஆனுர்.

காவிரிப்பூம் பட்டினத்திலே ஒரு வீரன், மத களிற்றைத் தாஞெருவனுகத் தாக்கி அடக்கும் ஆற்றலன், வள்ளல், கலைவல்லுநன். கற்பிலும் பொற்பிலும் சிறந்த காரிகை ஒருத்தியை மனைவியாகப் பெற்றவன். அவன், அந்நகரத்து ஆடல்மகள் ஒருத்தியின் அடிமலர்க்குத் தன் மனத்தைப் பறிகொடுத்து, தனது முன்னேர்கள் தலைமுறை தலைமுறையாய்த் தேடிக் குவித்திருந்த மலையளவு பெருஞ் செல்வத்தை இழந்து வறியனுனன்.

இவற்றுள் ஒன்று புராணம், மற்றது கதை.

'துறவறத்தில் நிற்பாரும் இல்லறத்தில் செல்வாரும் யாரும் பெண்மைக்குப் பலியாகிவிடுவர், தப்பி உய்வார் அரியர்' என்பதை விளக்க இவை சான்று. பெண்மை ஆற்றலுக்கு அப்பெண்மை ஆற்றலே உவமை. அதனை வெல்லும் ஆற்றல் பிறிது இல்லை.

எட்டாம் எட்வர்டு ஒரு பேரரசின் பெரு வேந்தர். அணுக்குண்டுப் புரட்சிக்கும் அசைந்து கொடுக்காமல் மரபொழுக்கத்தைப் போற்றுவதில் பெருமைகொள்ளும் மக்களினத்தின் மதிப்பிற்குரிய தலைவர். அவருடைய வாழ்க்கையில் குறுக்கிட்டாள் ஓர் அரிவை. அதனால், சிலகாலம் அவருடைய தலையை அணிசெய்த மணிமுடி அவளது காலடிகளில் விழுந்து மறைந்தது, தலைமுறை தலைமுறைக்கும் உரிமையற்று ஒழிந்தது. மண்ணாசை பொன்னாசைகளைக் காட்டினும் பெண்ணாசை பெரிதுபோலும்!

வரலாறு கண்ட மற்றொரு இளவரசர் பல நூற்றாண்டுகட்கு முன்னர்த் தமிழ்நாட்டிலே சேரர் குலத்திலே தோன்றியவர். இளமையிலே துறவு பூண்டவர். துறவியேயாயினும் கலைகளைக் கற்றுணர்ந்து அவற்றைப் போற்றுபவர். பெண்ணினுடைய அழகு, அன்பு, மென்மை, வன்மைமுதலிய இன்பப் பண்புகளில் ஈடுபட்டுத் தம் மனத்தினைப் பறிகொடுத்தார் அவரும். அவளைப்பற்றி எண்ணலானார். எண்ணங்கள் அலை அலையாக எழுந்தன. ஆரவாரப் புயல் அடங்கிப் பின்னர்த் தென்றலாகத் தெளிந்தது. அத்தெளிவிலே, 'விண்வாழ் தேவரும் தன்னை வணங்கி வழிபடும்படியான ஒப்பில் உயர்வுடையவள் இம்மண்வாழ் மானிடப் பெண்'

என்ற முடிபுக்கு வந்தார் அவர். அவளை வாழ்த்துதலினும் வணங்குதலினுமே இன்பங் கண்டார். எனவே, சிலப்பதிகாரம் என்னும் கவின்மிகு கவிக் கோயிலைக் கட்டி, அங்குப் பெண்கள் நாயகமாகிய கண்ணகியைக் கற்புக் கடவுளாக நட்டு, அக் கடவுளின் சிலம்பணி காலடியில் தம் இன் கவிப் புலமை எல்லாவற்றையும் படைத்தார்.

பெண்ணைக் காதலித்த பிறர் எல்லாரும் தமக்குரிய எல்லாவற்றையும் இம்மை மறுமைப் பேறுகளையும் அப்பெண்ணின் காலடியில் வைத்து, அவள் பெருமையையும் குலைத்துத் தாமும் சிறுமை எய்தினர். இளங்கோ என்னும் அத்தமிழ்ப் பெரியார் இயற்கை விலக்காகத் தம் பெண்காதலால் பெண்ணைப் பெருமைப்படுத்தித் தாமும் அழியாப் பெருமை பெற்றார்.

அவருடைய காதல் ஓர் உண்மைத் துறவியின் தூய காதல். பெண்ணை இன்பக் கலமாக எண்ணி அவளுக்கு வழிபாடாற்றும் காமுகனுடைய காதலன்று அது. அவள் மனித குலத்தின் அன்னையாக இருப்பதால் அவளைப் போற்றியொழுகும் மரியாதைக் காதலுமன்று. ஆனால்:

தமிழ்நாட்டில் தனவணிகர் மரபைச் சேர்ந்த ஒரு சிறு பெண். பன்னிரண்டு வயதிலேயே திருமணமாகி விடுகின்றது அவளுக்கு. தன் கணவன் வாணிகம் முதலிய தொழில்கள் நடத்திப் பொருளீட்டி வாழ்ந்திருக்கும் காலத்தில் அவளும் அவனோடு வாழ்க்கை இன்பங்களைத் துய்த்து மகிழ்கின்றாள். அவன் பின்னர்க் காமக் கிழத்தியிடம் சென்று அவளோடு பலவாண்டுகள் தங்கிக் குழந்தையும் பெற்றுக் குடும்பமும் வைத்துத் தன்கைப்

பொருள் அனைத்தையும் இழந்து வறியனானபோது, அவனோடு கோபித்துக்கொள்ளாமல், அவ்வறுமையிற் பங்கு கூர்ந்து தானும் உடன் வாடுகின்றாள். ஒருநாள் அவளும் அவள் கணவனுமாகப் பிழைப்பைத் தேடி வேற்று நாட்டுக்குச் செல்கின்றார்கள். அங்கே அரசாங்கத்தார் அவள் கணவனைக் கள்வன் என்று பிடித்துக் கொன்றுவிடுகின்றார்கள். அந்த அதிர்ச்சியினால் அவள் அம்பேறுண்ட மயில் போலச் சிறிதுநேரம் தரையிற் கிடந்து விம்முகின்றாள். பின்னர் வீறுகொண்டு எழுந்து, அந்நாட்டு அரசனையே நேரிற் கண்டு வழக்குரைத்துத் தன் வாக்கு வன்மையாலும் கண்ணீரின் வெம்மையாலும் அவனையும் அவன் தேவியையும் மடிவித்து, அவன் நகரை எரிக்கு இரையாக்கித் தன் கணவனுக்குற்ற பழியைத் துடைத்து, அவன் கள்வனல்லன் என்பதை உலகறியச் செய்த பின்னர்த் தன்னுயிர் துறக்கின்றாள்.

கடவுள் மனிதனுக்குத் துணை நின்று அவனைக் காப்பாற்றுகின்றாரா, அல்லது அவனைக் கைவிட்டு விடுகின்றாரா? இவ்வினாக்கட்கு யாவரும் ஏற்கும் விடை காண்டல் என்றும் அரிது. ஆனால் பெண் தெய்வம் எந்த மனிதனையும் என்றும் கைவிடுவதில்லை என்பது வெளிப்படை. இளங்கோ அப்படித்தான் கருதினார். அந்தக் 'கள்வனின்' மனைவி, அவன் தனக்கு எத்துணையோ துரோகங்கள் செய்திருப்பினும் அவற்றை எண்ணாது, அவன் பால் அன்பு கூர்ந்து அவனைப் பேணுகின்றாள். அவனுக்குச் சேவை செய்தலே அவளுக்கு இன்பம். அவன் பொருட்டுச் சாதலே அவளுக்குப் பேரின்பம். அவளுடைய ஆரா அன்புக்கும் அயராப்

பணிக்கும் அவள்தன் ஆயுள் எல்லையைத் தவிர வேறு எல்லை இல்லை. இத்தகைய அன்புருவமாகிய அவளை வணங்குதலைத் தவிர வேறு செய்யக் கிடப்பது என்? அத்தகைய மதிப்பால் எழுந்த வணக்கக் காதலே துறவியாகிய இளங்கோவின் காதல்.

நமது வீடுகளிலே நம்மிடையே தரையிலே நடந்துலவி நம்மை வாழ்விக்கும் மண்ணுலக மடந்தையே அவர் கண்ட உண்மைத் தெய்வம்.

> ' இன்துணை மகளிர்க்கு இன்றி யமையாக்
> கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
> பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலம் '

துறவியாகிய இளங்கோ மற்றொரு துறவியாகிய கவுந்தியடிகள் வாக்கால் இதனைக் கூறுவது, தாம் சொல்வது கதைக் குறுப்பாக வரும் புனைந்துரை வகையன்று என்று வற்புறுத்துதற்கே யன்றோ? கண்காணக் கடவுளர்க்குக் கற்கோவில் கட்டும் புவி மன்னர்கள் கண்காணும் இக் கற்புக் கடவுள்கட்கும் கற்கோவில்கள் கட்டவேண்டும் என்கிறார். அங்ஙனமே, கவி மன்னர்களும் அவர்கட்குக் கவிக் கோவில்கள் கட்டவேண்டுமென்று அவர் உள்ளத்தெழுந்த வேட்கைப் பெருங்கடலில் விளைந்த ஆரமுதமே நாம் பெற்ற ' சிலம்பு '.

புலவர் பெருமானாகிய இளங்கோவின் உள்ளம் பெண்மைக்கு அடிமைப்பட்டதற்குப் பெண்ணின் பெருமைக் குணங்கள் மட்டும் காரணமாகா. அப் பெருமைக் குணங்களைப் பிறர் யாரும் காணாவாறு தெள்ளெனக் காணும் கூரிய மதியும் சீரிய பண்பும் அவர்க்கு இயல்பாக அமைந்திருந்தது மற்றொரு காரணம். இவ்விரண்டனோடு, முற்காலங்களிற்

போலவே பெண்ணைப் பெண்ணாகவே வைத்துப் போற்றுமல் அந்நிலையை மாற்றி அவளைத் தெய்வ மாக ஏற்றிப் போற்றுதற்குரிய வரலாற்று நெருக் கடி ஒன்றும் அவர் காலத்தே எழுந்தது. தண்கதிர் நிலவின் பாலொளிக்குப் பொங்கிஎழும் புணரி கரை கடவாது அவ்வரம்பினுள்ளேயே அடங்கிக் குமை வதுபோல, அவரும் பெண்மைக் குருகிய தம் உள்ளத்துணர்ச்சிகளைத் தம்மகத்தேயே அடக்கித் தனிமையிலேயே வாழ்ந்து மறைந்திருப்பார். ஆனுல் காலக்கடவுள் பெண்ணைப் பாடும் பெரும் பணிக்கு அவரை ஈர்த்துக் கொண்டு வந்தது. எங்ஙனம் ?

## II

சமண பௌத்த சமயங்கள் இளங்கோ காலத் துக்கு முன்னரிருந்தே தமிழ்நாட்டிற் புகுந்து தமிழர் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு வந்தன. அதனுல் அவர்தம் வாழ்க்கை மரபுகள் சிதையத் தொடங்கின. புதுமைகள் வந்து புகுதற்கு முன்னே தமிழன் வீட்டைவிட்டு வெளியேபோய்க் காடு மலைகளைக் கடந்து,

> ' பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்ருேர்
> கழிநல் குரவே தலை '

என்ற மேற்கோளோடு, நன்னெறியில் நின்று பொருளீட்டிக்கொண்டு வருவான். அவன் மனைவி வீட்டில் அமர்ந்து,

> ' பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
> வழியெஞ்சல் எஞ்ஞான்று மில் '

என்னும் உரிமையுடன் அறம்புரிந்து இல்வாழ்க்கை நடத்துவாள். இவ்வாறு புறம் அகம் என்னும்

இருகூற்றுள் அமைந்து, வீரமும் அன்பும் கலந்த சீரிய வாழ்வினை நடத்திவந்தனர் தமிழ் மக்கள். ஆணும் பெண்ணும் கூடி வாழ்தலாகிய இயற்கை வாழ்க்கையினையே அறம் என்று போற்றினர் தமிழர். ஆனால் ஆணும் பெண்ணும் பிரிந்துறைதலாகிய துறவினையே அறம் எனச் சாற்றினர் சமணர் முதலியோர்.

அவ்வளவோடு மட்டும் அவர்கள் நின்று கொள்ளவில்லை. இசையும் நாடகமும் காமத்தைப் பெருக்கி மக்களைக் கெடுப்பன என்று அவற்றுக் கெதிராகவும் போர் தொடுத்தனர். அதனால் முத்தமிழாக மலர்ந்திருந்த தமிழர் வாழ்வும் இலக்கியமும் இயல் ஒன்றேயாகச் சுருங்கத் தொடங்கின. முத்தமிழ்க்கும் இலக்கணம் உரைத்த அகத்தியரது மாணாக்கராகிய தொல்காப்பியர் இசை நாடகங்களை நீக்கிவிட்டு இயற்றமிழ் ஒன்றற்குமே இலக்கணம் வரைந்தார். தமிழர் வாழ்வென்னும் சோலையில் பாடும் குயில்களும் ஆடும் மயில்களுமாகிய பாணர் கூத்தர் முதலிய கலைஞர் இனம் கவின் இழந்து வாடிற்று. அவர்களது யாழும் குரலும் கிணையுமாகிய இசைக்கருவிகள் தேடுவாரற்றுக் கிடந்தன.

சாத்தனார் என்னும் சங்கப்புலவர் பன்னிரண்டு வயதுச் சிறுமிக்குக் காதல் வாழ்வை மறுத்து, அவளுக்குப் பழம்பிறப்புணர்த்தி, அறவுரைகள் புகட்டி, அவள் கையில் அன்னபாத்திரத்தைக் கொடுத்து 'அறவாழ்வில்' அவளைச் சேர்த்தார். வாழ்வென்னும் அறத்தேர்க்கு அச்சாணியாக இல்லத்தே மறைந்துறைந்த பெண்டிர்க்கு நாட்டுக்கு நாடு சென்று ஞான வழிகாட்டும் புது

நெறி காட்டினர் அவர். காவிரிப்பூம்பட்டினத்திலே வேந்தனுக்கு ஒத்த பெருஞ் செல்வம் படைத்த பழங்குடிப் பெருமக்களும் வாழ்க்கையில் சலிப்புற்றுத் துறவிகளாயினர்.

மனிதப்பிறப்பு வாழக்கிடைத்ததொரு வாய்ப்பு, இவ்வாழ்க்கை இனிது, இவ்வுலகம் அழகிது என்ற தமிழ்க் கொள்கை தளர்ந்து, உடல் உலகமெல்லாம் பொய், பிறப்பு முன்னைவினையின் தீப்பயன் என்ற ஒவ்வாக்கருத்து எழுந்தது. அதாவது, வாழ்வின் மையம் இவ்வுலகத்தினும் அதன் நுகர்ச்சிகளினும் நின்று கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாக் கற்பனை வீட்டுக்கு மாற்றப்பட்டது. செத்த பின்னர் எய்தப் போகும் வாழ்க்கையின் பொருட்டு இப்போதுள்ள இவ்வாழ்க்கையைப் பணயம் வைத்து இழக்கும்படி ஏவப்பட்டனர் தமிழ் மக்கள்.

பெண்ணைப் போற்றுதலும், அவள் அழகை வியத்தலும் தமிழ் மரபு. 'கோதுதலுற்ற கடைகுழன்ற ஐம்பாலாகிய கூந்தலினையும், வளைந்த இறையினையுடைய நெடிய மெல்லிய தோளினையும், பெரிய அழகிய மலர் போலும் கண்ணினையும், மான்பிணையினது வெருவின நோக்குப் போலும் நோக்கினையும், மழையைப்பெற்ற தளிர் போலும் நிறத்தினையும், அழகு பெறுகின்ற பிறைபோன்ற நுதலினையும், விழுந்தெழுந்த கூரிய எயிற்றினையும், விழுந்து எழாத முகைபோலும் வெள்ளிய பல்லினையுமுடைய கொடியையொக்கும் இடையினையுடையாள்.'

' வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோள்
பேரெழில் மலருண்கண் பிணையெழில் மானோக்கின்

காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதல்
கூரெயிற்று முகைவெண்பல் கொடிபுரை நுசுப்பினுள்'

இவ்வாறு சங்ககாலத் தமிழர்க்குப் பெண் ஓர் அழகுக் கோயிலாகக் காட்சி அளித்தாள். அவள் அவர்களுக்குப் பாடும் பொருளாகவும் பரவும் தெய்வமாகவும் விளங்கினுள். பெண் மலரைச் சூழ்ந்து சூழ்ந்து அதன் புகழ் பாடும் வண்டெனக் களித்தனர் வான்தமிழ்ப் புலவர்கள். அவள் இளமையும் எழிலும் முருக வேளாகக் காட்சி அளித்தன அவர்களுக்கு. இன்ப ஒழுக்கமாம் குறிஞ்சி, சேயோனது ஆதரவில் இயல்வதாக நம்பினர்.

தமிழ் உள்ளத்துக்குச் சலியா இன்பம் தந்த அப்பெண்ணைச் சமணர் எள்ளிச் சிரித்தனர்.

'யாக்கைக் கோர்
ஈச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே
காக்கை கடிவதோர் கோல்.'

'ஊறி உவர்த்தக்க ஒன்பது வாய்ப்புலனும்
கோதிக் குழம்பலைக்கும் கும்பம்.'

'குடரும் கொழுவும் குருதியும் என்பும்
தொடரும் நரம்பொடு தோலும்—இடையிடையே
வைத்த தடியும் வழும்புமாம் மற்றிவற்றுள்
எத்திறத்தாள் ஈர்ங்கோதை யாள்?'

'முல்லை முகைமுறுவல் முத்தென்று இவைபிதற்றும்
கல்லாப் புன்மாக்கள் கவற்ற விடுவேனே'

தையலாரின் தளிர்மேனியில் ஈச்சிறகளவு சிறிய தோல் அறுபட்டால், அப்புறம் அப்புண்ணைக் குத்தவரும் காக்கைக் கூட்டத்தைக் கடிவதற்குத் தடிக்கம்புதான் வேண்டும்! குடலும் கொழுப்பும் இரத்தமும் எலும்பும் நரம்பும் தோலும்—இவைதாம் கோதையணிந்த மாதர் மணியின் கூறுபாடுகள்!

சமணம் தழுவிய தமிழர்க்கும் அவர் போன்ருர் பிறர்க்கும் தமிழ்ப் பெண் இப்படிக் காட்சி அளித் தாள். எட்டா உயரத்தில் இறுமாந்தமர்ந்திருந்த ஈர்ங்கோதையாள் இவ்வாறு மண்ணில் வீழ்த்தப் பெற்ருள்.

சமயவேறுபாடுகளுடன் தமிழரது வாழ்க்கை யின் போக்கை மாற்றியமைக்கும் மற்ருெரு புது மையும் கடைச் சங்ககாலத்தில் தமிழ் நாட்டில் புகுவதாயிற்று.

*' நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க்குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க்குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கி னுடியற் பெயரே
யின்றிவ ரென்னு மெண்ணியற் பெயரொ
டன்றி யனைத்து மவற்றியல் பினவே'

இங்ஙனம் நிலம், குடி முதலியவற்றிஞலன்றி, உயர்வு தாழ்வு ஆகிய சாதிமுறை யறியாத தமிழ

---

*நிலப்பெயர்—அருவாளன், சோழியன்.
குடிப்பெயர்—மலையமான், சேரமான்.
குழுவின்பெயர்—அவையத்தார், அத்திகோசத்தார்.
வினைப்பெயர்—வருவார், போவார், தச்சன், கொல்லன்.
உடைப்பெயர்—பேரூர்கிழான், அம்பர்கிழான், வெற்பன் சேர்ப்பன்.
பண்புகொள் பெயர்—கரியான், செய்யான்.
முறைநிலைப் பெயர்—தந்தையர், தாயர்.
சினைநிலைப் பெயர்—பெருங்காலர், பெருந்தோளர்.
திணைநிலைப் பெயர்—குறவர், ஆயர், வேட்டுவர், உழவர்.
கூடிவருவழக்கிஞடியற்பெயர்—பட்டிபுத்திரர், கங்கைமாத் திரர்.

சேனுவரையர் திணைநிலைப் பெயர்க்கு ஐவகை நிலத்து மக்கள் பெயருடன், பார்ப்பார் அரசர் வணிகர் வேளாளர் என்றும் கூறியுள்ளதைக் காண்க.

ரிடையே அந்தணர் அரசர் முதலிய பல்வேறு சாதிப் பகுப்பு ஏற்பட்டது.

பெண்ணைப் பழித்துக் கூறிய காரணத்தால் ஏற்கெனவே தமிழ் மக்களுடைய குடும்ப வாழ்க்கை நலிவுறத் தொடங்கி இருந்தது. அதனோடு சாதி வேறுபாடும் சேர்ந்து கொண்டதால் தமிழ் இனமே பிளவுபட்டழியும் தீப்பேற்றுக்கு இலக்காயிற்று. அந்நிலையில், தலைமுறை தலைமுறையாய் முடி தாங்கித் தமிழகத்தைக் காவல் செய்துவந்த மூவேந் தரும் பல்லவர்க்குப் பணிந்து சிற்றரசர்களாய் மறையத் தலைப்பட்டனர். வாடாவஞ்சியும், வள மார் உறந்தையும், வண்புகாரும், மாட மதுரையும் தத்தம் தலைமை இழக்கக் காஞ்சி நிவந்தோங் கிற்று. கலிமதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பேரொலி அவிந்து, காஞ்சியில் வடமொழிக் கலை ஆராய்ச்சி வளரலாயிற்று. தமிழ் மக்களுடைய உயிராய், அவர்களுடைய அகவாழ்வு புறவாழ்வுகளை வகுக் கும் வரம்பாய்த் தன் ஆட்சி பீடத்தில் அமர்ந்திரு மாந்திருந்த அருந்தமிழ் ஆட்டம் கண்டது. பல்ல வர்கள் சில நூற்றுண்டுகள் தமிழகத்தில் தங்கி, தமிழரோடு இணங்கி, தமிழ்ச்சான்றோராகிய அப்பர் போன்றூர்க்குப் பணிந்து தாமும் தமிழராக மாறியதுவரை, அதாவது ஏறத்தாழ நான்காம் நூற்றுண்டுமுதல் எட்டாம் நூற்றுண்டு வரைக்கும், தமிழ் மக்களுடைய குடும்பம், சமூகம், அரசியல், கலை, நாகரிகம் முதலிய எல்லாத் துறைகளிலும் இவ்வாறு ஒரு பெரும் புயல் வீசி அலைத்தது.

காலத்தின் வேலை அது. அது செய்யும் மாற் றங்களை மனிதனல் தடுக்கமுடியாது. ஆயினும் அவன் கால வெள்ளத்தைக் கண்டு வாளா கையைக்

கட்டிக்கொண்டிருப்பவன் அல்லன். தோற்கும் வரை அதனோடு போராடுவதில் இன்பம் காணும் இயல்புடையவன். இன்று உலகில் நிலவும் அரசியல், நீதிநெறி முதலிய துறைகளின் முன்னேற்றம் யாவும் காலமும் மனிதனும் இடையருது நிகழ்த்தி வந்த போரின் விளைவுகளேயாகும்.

தொடக்கத்தில் சிறு காற்ருக ஊதிப் பின்னர்ப் பெரும் புயலாக மோதிய புதுமைப் புரட்சியை உணர்ந்து, அதனைத் தடுக்கும் உரமுடைய இலக்கிய வீரர் அவ்வப்போது தமிழகத்தில் தோன்ருமல் இருந்ததில்லை. அவ்வறிஞர் படைக்குத் திருவள்ளுவ நாயனரைக் காலத்தால் முற்பட்ட தலைவராகக் கருதலாம். கருவிலே திருவுடையராய்ப் பேரறிவைத் தம் பிறவிச் செல்வமாகப் பெற்றுப் பிறந்த பெரியோருங்கூடத் தாம் வாழும் காலத்தைக் கடந்து நில்லார். அதாவது அவர்களுடைய எண்ணங்களும் உணர்ச்சி இயல்புகளும் அவர்கள் வாழும் அக்காலத்தில் நிலவும் எண்ணங்கள் உணர்ச்சிகளின் முத்திரை பொறிக்கப் பட்டிருக்கும். வள்ளுவர்பாலும் இதனைக் காண்கிருேம்.

கற்புடைய மனைவி மட்டுமன்றி, வேறு உரிமை மகளிராகிய காதற் கிழத்தியருடனும் காமக் கிழத்தியருடனும் பண்டைத் தமிழனது இல்வாழ்க்கை பின்னிக் கிடந்தது. அவன் பரத்தையரை நாடிச் செல்லுதலை அவனது மனைவியும் அவளது தோழிமார் முதலிய நெருங்கிய சுற்றத்தினருமே வெறுத்து வருந்தினர். சமூகம் அதனை ஒரு பெருங் குற்றமாக வற்புறுத்தவில்லை. மதுவும் ஊனும் தமிழர்க்குச் சிறந்த உணவாக இருந்தன.

பெண்டிரும் உண்டியும் இன்றுஎனின் மாக்கட்கு
உண்டோ ஞாலத்து உறுபயன் ?

என்று வினவிய நாகரிகமற்ற நாகர், சாதுவனால் திருத்தப் பெறும் முன்னர் இருந்த அதே நாகரிக மற்ற நிலையில் தமிழர் இருந்தனர் என்று பௌத்த ரும் சமணரும் அவர்களைப் பழித்தனர்.

தமிழரது தனிக் கொள்கையில் 'ஊறிய நாய னார்க்கு அவர்கள் கடிந்துரை அறமாகப்பட்டது. 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு'. எனவே, அவர், ''விலை மகளிரது தோள்கள் அறி விலார் வீழ்ந்து ஆழும் நரகம். கள் உண்பவர் நஞ்சு உண்பவரே. ஊன் உண்பவனிடம் அருட் குணம் அமையாது' என்று இத்தகைய முற்போக் கான புதிய முடிவுக்கு வந்தார். இச் சீர்திருத்தங் கள் தமிழர் வாழ்வுக்கு இன்றியமையாதன என்று அவர் கொண்டதில் தவறு ஒன்றுமில்லை.

ஆனால், தமிழ்ச் சமூகத்தின், ஏன், மனித இனத்தின் வேரையே பறித்து விடுவதாகச் சமணர் பௌத்தர்கள் கூறிய ஏனை ஒவ்வாக் கருத்துக்களை ஏற்க அவர் மறுத்தார். உடையின்றி, ஊண் இன்றி, இல்வாழ்க்கையும் இன்றி உயிர்வாழ வேண்டும் என்று, ஓர் அறவுரை எழுந்தால் யார்தாம் அதனை ஏற்பர்? எனவே, புதுமை வரவில் எவ்வெவை கொள்ளத் தக்கன, எவ்வெவை தள்ளத்தக்கன என்று தமிழ் மக்கட்கு அறிவுறுத்தும் நன்னூல் ஒன்று அப்போது தேவைப்பட்டது. தமிழரசர் களை மாய்த்துத் தமிழ்ச் சங்கத்தைக் குலைத்துத் தமிழ் மரபுகளைச் சிதைத்துத் தமிழ் நாட்டை அலைக்கப் புக்க கன்னெஞ்சக் காலத்தின் அருள்

கரம் அளித்த அருநிதியமாக மலர்ந்தது திருக் குறள். அதனை மதுரை அறுவை வணிகன் இளவேட்டனர், நோய்வாய்ப்பட்ட மக்களினத் துக்கு மருந்துபோல் பயன்படுவதாகிய வாயுறை வாழ்த்தென்று பாராட்டினர். நப்பாலத்தனர், குலபதி நாயனர் முதலியோர், வையத்து வாழ் வார்கள் உள்ளிருள் நீக்கும் விளக்கென அதனை வியந்தனர். அது தோன்றியதன் பயனய்,

> ‘ பொய்ப்பால பொய்யேயாய்ப் போயின பொய்யல்லா
> மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே.’

‘இல்லற மல்லது நல்லறமன்று’ என்று செந் தமிழ்ச் செல்வர் சிலர் முழங்கினர். சமணரும் பிற ரும் துறவே அறமென்றனர். நாயனர் இவ்விரு பாலார்க்கும் நடுவதாகிய நெறி ஒன்று கண்டார். துறவை வலியுறுத்தும் புதிய இயக்கங்கள் தம் எல்லையைத் தாண்டி வராமல் நின்று கொள்ள வேண்டும்; அவற்றின் தாக்குதலின்றித் தமிழ் நெறி தன் எல்லைக்குள் நின்று தழைக்க வேண்டும் என்பது அவர் அளித்த தீர்ப்பு.

> ‘ அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை, அஃதும்
> பிறன்பழிப்ப தில்லாயின் நன்று ’

இல்வாழ்க்கையே அறம் எனப் போற்றற் குரியது. துறவறமும் பிறர் பழிப்புக் கிடமின்றித் தூய்மை யுடன் ஒழுகப் பெற்ருல் நன்றுதான் என்பது இக் குறளின் பொருள்.

அறத்தை வற்புறுத்துவது போன்று சமண பௌத்தங்கள் கடவுள் வழிபாட்டை வற்புறுத்த வில்லை. ஆனல் வள்ளுவர் தம் குறளின் பாயிரத் தில் கடவுள் வழிபாட்டை முதலதிகாரமாகவும், அறன் வலியுறுத்தலை நான்காம் அதிகாரமாகவும்

வைத்து, அறத்தைக் காட்டிலும், மழையும் புலனடக்கமுள்ள பெரியோருமே மக்கள் வாழ்வுக்கு உதவுகின்றுர்கள் என்று கற்பித்தார். இங்ஙனம் அவர் ஒரொருசார் பிறர்க்கு உடன்பட்டும், ஒரொருசார் அவர் கூற்றுக்களை மறுத்தும், திருத்தியும் புதுக்கியும், தமக்கே சொந்தமானதொரு புதிய தமிழ் நெறியை வகுத்துள்ளார்.

இளங்கோவடிகளும் இங்ஙனம் தமிழ் மரபு காத்த வள்ளுவர் பரம்பரையில் தோன்றியவரே யாவர். சிறிய உருவமும் பெரிய பொருளும் படைத்த குறட்பாக்களை அவர் போன்ற நுண்ணறிவு படைத்த மேதைகளே பயின்று தெளிதல் கூடும். 'பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட சிறியிலை நெல்லித் தீங்கனி' போல யாவர்க்கும் எட்டா அருந்தமிழ்ச் செல்வம் அது. மேலும், நாடகச்சுவை அமையக் கவிதை செய்தலே பழந்தமிழ் மரபு. கவி புனைவாரும் பயில்வாரும் உணர்ச்சி வசப்பட்டு இன்புறுதலையே கவிதையின் முதற்பயனுகக் கருதிஞர்கள். ஆனல் கவிதையின் உயிராகிய இன்பத்தை நெகிழ்ந்து, அதனை அறம் உரைக்கும் கருவியாக மாற்றி, நாலடி போன்ற யாப்புக்களை ஆக்கினர் சமணத் தமிழர். இம்மை வாழ்வில் இன்பத்தை ஊட்ட விழைந்தது சங்கத் தமிழ். சமணர் தமிழ் மறுமையை நாடிற்று. குறளும் சங்கப் பாட்டுக்கு விலக்காய் ஒரு நீதிக் காப்பியமாக அமைந்திருத்தலின், பாமரத் தமிழர்க்கு எட்டினுலும்கூட அது அவர்கட்கு நாடகச்சுவை நல்குவதாய் இல்லை.

வள்ளுவர் தொடங்கிய தமிழ்ப் பணியைத் தொடர்ந்து ஆற்ற முன் வந்தவர் இளங்கோ. அத்

தமிழ்ப் பெருமக்கள் இருவர்க்கும் அடிப்படையில் வேற்றுமை ஒன்று காண்கின்றோம். நாயனார் உள்ளம் அறச்சார்புடையது, அடிகள் உள்ளம் தமிழ்ச் சார்புடையது. இவர்கள் இனத்தில் பிற்காலத்துத் தோன்றிய கவிச் சக்கரவர்த்தியின் உள்ளம் கலைச் சார்புடையது. எனவே இம்மூவர்தம் நூலும் மூன்று வகையாய் அமைந்திருப்பதில் வியப்பில்லை. முப்பாலாய் எழுந்த நாயனார் நூல், மக்கள், அறம் பொருள் இன்பம் என்னும் முப்பொருளும் எய்தி முழுவாழ்வு வாழத் தூண்டிற்று. தமிழ் மக்களை மட்டுமன்றி உலகத்து எல்லாநாட்டவரையும் எல்லாக் காலத்தினும் உய்விக்கும் உயர் நோக்குடன் எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது திருக்குறள்.

இளங்கோ தமிழ் மக்களைக் கருதியே தம் கதைக் காப்பியத்தினை வரைந்தார். பழந்தமிழ் முறையில் நாடகச் சுவை சொட்டும் கவிதைத் தொகுப்பு அது. பாமரர் தாமும் கேட்டு இன்புறும் கதை அமைப்புடையது. தமிழ் நாட்டையும் தமிழ் அரசர் ஆட்சியையும் தமிழையும் தமிழ் வாழ்வையும் மறக்கத் துணிந்து, அறத்தின் பெயரால் புதியதோர் இனமாக உருமாறி அழியவிருந்த தமிழரைக் காக்கும் அமுத சஞ்சீவியே அருமைச் சிலப்பதிகாரம்.

மூவேந்தர் ஆட்சியிலே முத்தமிழ்க் கலையும் முழங்கிட, காதலும் வீரமும் களிநடம் புரிய, தமிழர் ஓரினமாக வாழ்ந்திருந்த பழங் காலத்தை எண்ணி ஏங்கியது அவர் தமிழ் உள்ளம். மனித வாழ்வுக்கு உயிராய் இருந்த பெண் பெருமை இழப்பதைக் கண்டு இரங்கியது அவர் அருள் உள்ளம். தம் ஈடேற்றத்தையே நாடித் தனித்து வாழும் தன்னலத்

துறவியல்லர் இளங்கோ. வரலாறு அறியாப் பழங் காலந் தொட்டுக் கலை முதிர்ச்சியுடன் பெருவாழ்வு வாழ்ந்த தமிழினத்தை மீண்டும் வாழ்விக்க விரும் பினர் அவர். அரசனது அறியாமையினால் கோவ லன் வெட்டுண்டு வீழ்ந்தான். அதுபோன்று மக் கள்தம் அறியாமையால் அவர்கள் வாழ்வு தமிழ் நாட்டிலே கொலையுண்டு கிடந்தது. கண்ணகி யைப் போலவே இளங்கோவும் முதலிற் கலங்கித் தவித்தார். பின்னர் வீறுகொண்டெழுந்த அவள் தன் ஆற்றல் போன்று, அவர் தம் புலமையும் வீறு கொண்டெழுந்தது, தமக்கு எதிராகச் சீறிய காலத்தை மீறினர். எனவே, மணிமுடி அணியும் மன்னர் பதவியைத் தள்ளிவிட்டு, தமிழின் அடி சூடிப் பணி புரியும் பேற்றை ஏற்றார்.

தமிழை அல்லது தமிழினத்தைக் காக்க வேண்டுமென்றால் அதன் ஆன்மாவை அழியாமல் தடுத்தல் ஒன்றே அதற்கு வழி. தமிழன் புதுமை மோகத்துக்கு அடிமையாகித் தன்வசமிழந்து, தன் ஆன்மாவைப் பறிகொடுத்து வேரற்று விழலாகாது. அவன் முன்னோர்களது சிந்தனைகளிலும் செயல் களிலும் ஆயிரமாயிரம் ஆண்டுகளாய் ஊறி உர மேறிய மொழிப் பண்பும் வாழ்க்கைப் பண்புமே அவன் ஆன்மா. எனவே அவ்விரண்டனையுமே பாடினர் அவர்.

அதனால்தான், சிலப்பதிகாரம், தமிழ் நாட்டுக் கலியாணம், தமிழ்த் தம்பதிகளின் இன்ப வாழ்க்கை, தமிழ் நாட்டுத் திருவிழா, தமிழ் நாட் டுக் கலைகளாகிய ஆடல் பாடல்கள், தமிழ் நாட்டு அழகிய நகர்கள், ஆறுபோன்று அகன்று நீண்ட அவற்றின் தெருக்கள், எழுநிலை மாடங்கள், அல்

லங்காடி நாளங்காடிகள், தொழில் வகைகள், வண்ணங்கள் சுண்ணங்கள், புகைகள் பூக்கள், அணிகள் ஆடைகள், அரசர்கள் அரசியல் முறைகள், நாட்டு வளம் நதி வளங்கள், தமிழர் வீரம், அவர் தம் போர்கள் வெற்றிகள், தமிழ்க் குடும்பங்கள், அவற்றின் குடித்தனப் பாங்குகள் முதலிய எல்லாம் உரைக்கும் அருங்கலப் பேழையாக அமைந்திருக்கின்றது.

இத் தமிழ்ச் செய்திகளைச் சொல்வதற்குத் தம் காலத்தில் வழக்கிலிருந்த செந்தமிழ் உரைநடையினையும், செய்யுள் நடைகள் எல்லாவற்றையும் கையாண்டுள்ளார் அடிகள். அகவல் முதலிய பாக்களும், பாவினங்களும் கலந்த செய்யுட் கோவையாய், கானல் வரி வேட்டுவ வரி, உரைப் பாட்டு மடை துறைப்பாட்டு மடை, ஆய்ச்சியர் குரவை, கருப்பம், கொளு, எடுத்துக்காட்டு, உள் வரி வாழ்த்து, முன்னிலைப் பரவல், படர்க்கைப் பரவல், குன்றக் குரவை, கொளுச்சொல், அம்மானை வரி, கந்துக வரி, வள்ளைப் பாட்டு, ஊசல் வரி முதலிய இசைப்பாட்டு விகற்பங்களும் ஒருங்கே முழங்கும் அழியாத் தமிழிசை அரங்கமாக விளங்குவது சிலப்பதிகாரம்.

தமிழ் நாட்டிற்குப் பிறர் கொண்டுவந்த அறம் துறவு. தமிழர் தலைமுறை தலைமுறையாய்க் கண்டு உவந்த அறம் இல்லறம். அன்பும் இன்பமும் கலந்துறவாடும் களிக்களம் அது. ஒருவர் இன்புறுவதை மற்றவர் கண்டு மகிழும் பண்பினை வளர்க்கும் பயிற்சிக்கூடம் அது. ஒருவர் பொருட்டு மற்றவர் தம் ஆருயிரையே தியாகம் செய்யும் அணையாத் தவ வேள்வி அது. அறம் பொருள் இன்பங்களையும்,

இறுதியில் வீட்டையும் தரும் அறிவு நெறி அது. அதற்கு உயிராய் இருப்பவள் பெண். அவள்மீது தான் தமிழர் வாழ்வென்னும் சித்திர மாடம் எழுந்து நின்றது. அவளை இகழ்ந்து, இல்லறத்தைக் கடிந்து அடிப்படையைப் பிடுங்க முனைந்தனர் அமணர் ஆதியோர். அம்முயற்சிக் கெதிராகப் போர் தொடுத்தார் இளங்கோ. கண்ணகிப் பெண் அவர் கை வச்சிரப் படையானாள்.

சமயங்களின் தவறான கொள்கைகளால் மட்டு மன்றி, நகர வாழ்க்கையின் செல்வச் செருக்காலும் கலைப் பெருக்காலும் அக்காலத்தில் இல்வாழ்க்கை அழிந்து வந்தது. இல்வாழ்க்கைக்கு உறுப்பாகிய ஆடவர்கள்

> ' வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு
> குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப்
> பொச்சாப் புண்டு பொருளுரையாளர்
> நச்சுக் கொன்று '

தம் கற்புடை மனைவியர்க்குச் சிறுமை செய்து இல்லறத்துக்குக் கேடு சூழ்ந்து வந்தனர். இங்ஙனம் சமயமும் சமூகமும் சேர்ந்து செய்த சதிக்கு எதிரே தமிழ்ப்பெண் ஒருத்தியே தனி நின்று போராடித் தமிழ் வீட்டையும் வாழ்வையும் காக்க முயன்று கொண்டிருந்தாள். அவளுக்குத் துணை செய்ய விரைந்தார் அடிகள்.

அவர், அவள்பாலுள்ள கடவுட்டன்மையைக் கண்டு அவளைத் தம் காப்பியத் தலைவியாக்கி, அவளால் தமிழினத்துக்குச் சாவாமை நல்கினார். இப்பெரும் பணிக்குப் புலமை மட்டும் போதாது. சாத்தனார் போன்ற தமிழறிஞர்களையும் மறுத்துரைக்கும் மனத்துணிவும் வேண்டும். ஒழுக்கத்தில்

துறவும், சொல்லில் பாகு போன்ற இனிமையும் கனிவும், கொள்கையில் எஃகு உறுதியும் படைத்த அவர்க்கு அது அரிதன்று. தமிழின் உயிரைக் காக்கும் உயிர்க் காப்பியமாகிய சிலம்பு ஒன்றே அவர் இயற்றியது. அதற்கே அவர் தம் புலமை அனைத்தையும் படைத்தார்.

அவருடைய புலமைப் படைப்பு வீணாகவில்லை. அதனால் இன்றுவரை முத்தமிழும் பிழைத்துள்ளன. தமிழ் மரபுகள் பிழைத்தன. அடிகளாருடைய அமுதவாக்கின் பெரு முழக்கத்துக் கெதிரே அயலார் பேச்சுத் தமிழர் செவியில் ஏறவில்லை. சமண பௌத்தங்கள் தமிழ் எல்லையை விட்டு வெளியேறத் தலைப்பட்டன. நாயன்மார், ஆழ்வார்களுடைய தமிழ்ப் பாடல்கள் அவற்றை மேலும் துரத்தியடித்தன. பழைய தமிழ்க் காஞ்சி போன்று, வாழ்க்கையின் முதிர்ச்சியாகிய மனத் துறவே துறவு என்றாயிற்று. பெண்ணுக்கு எதிராக எழுந்த சூழ்ச்சி வீழ்ந்து மடிந்தது. அவள், மண்ணில் மன்னரும், விண்ணில் தேவரும் வழி படும் கண்ணகித் தெய்வம் ஆயினள். தெய்வத்தை யாரேனும் எக்காலத்திலேனும் அழிக்க முடியுமா? அன்பு செய்து அறம் காக்கும் அரிவை நல்லாளைத் தெய்வமாக்கி, அவள்மீது கொண்ட அன்பால் தாமும் தெய்வமாகிய இளங்கோ, இந்துவும் இரவியும் உள்ளவரை தமிழ் மனத்தை ஆளும் தனிப் பேறு பெற்றார்.

## 2. ஒழுக்கம் கண்ட ஒப்பில் கவியுள்ளம்

### I

மக்கள் நெடுங் காலமாகத் தாம் நின்ற நிலையிலேயே நின்று மேற்செல்ல அறியாது தேங்கிக் கேடுறும் நிலையில், அருள் வாய்ந்து பிறந்து, தம் நுண்ணறிவு விளக்கத்தால் அவர்கள் முன்னேறுவதற்கு வழி காட்டுபவர்களே புலவர்கள். புலம் என்பது அறிவு. அதனை உடையோர் புலவர். அப்புலமையாளர்களைப் புதுமையாளர்கள் என்று சொல்வதே பொருத்தமாகும். ஏனென்றால், மற்றவர்களுடைய காட்சிக்கும் கருத்துக்கும் எட்டாத புதுமைகளைக் கண்டு அவர்கள் சொல்கிறார்கள். அவை நாட்டிலே தொன்று தொட்டு வருகின்ற பழமைகளுக்கு முரணாக இருப்பினும் அவற்றைச் சொல்வதற்கு அன்னார்க்கு அச்சமோ தயக்கமோ இரா.

மற்றவர்கள் யாவரும் பழமையாகிய சுமையால் திணறிக் கொண்டிருக்கும்போது, புலவர்கள், உந்து பலகையின்மீது நின்று அது கொடுக்கும் வேகத்துடன் தன் வேகத்தையும் உடன்கூட்டித் தாவுகின்றவனைப்போல, பழமையைத் தம் அடிக்கீழ் வைத்துக் கொண்டு, தாம் வாழும் காலம் சமூகம் முதலியவற்றுக்கு அப்பாற்பட்ட புதிய புதிய சிந்தனைப் பொறிகளைச் சிதறி விடுவார்கள். வாழ்க்கையின் விளங்காத புதிர்களுக்கு விடை அளிப்பார்கள். சமூகத்தில் நிலவும் தீராத சிக்கல்களைத் தீர்த்துவிடுவார்கள். முன்னேற்றத்துக்குத் தடையாக நிற்கும் குருட்டு நம்பிக்கை, மூடப் பழக்கம் முதலிய முட்டுக்கட்டைகளைத் தகர்த்து

 அவ்வை தி.க. சண்முகம் நூலகம்

எறிவார்கள். வலியிழந்து நலிந்து கிடக்கும் சமூகத்துக்குப் புதுவலியூட்டி நம்பிக்கை யளிப்பார்கள். புயலாக மோதும் புரட்சிகளை அடக்குவார்கள். கரையை உடைத்துக்கொண்டு வரும் சீர்திருத்தப் பெரு வெள்ளங்களை அணையிட்டுத் தடுத்து, வாய்க்கால் வழியே ஒழுகிப் பயனுறச் செய்வார்கள். எல்லாரையும் எல்லாக் காலமும் எல்லாத் துறையிலும் வாழ வைப்பார்கள். அவர்கள் வீரர்கள், தீர்க்க தரிசிகள், சீர்திருத்தக்காரர்கள்,.சட்ட நிபுணர்கள், பேராசிரியர்கள், கடவுளம்சமானவர்கள்.

புதுமையாளர்கள் என்று சொல்லப்படுவதால், அவர்கள் தம் விருப்பம்போல் எதையும் சொல்வார்கள் என்பதில்லை; அப்படிச் சொல்லவும் மாட்டார்கள் அவர்கள். தாம் வாழும் சமூகத்தினுடைய பழங்கால மரபுகளைக் கூர்ந்தறிந்து, அந்த அடிப்படையின் மீதே தம் கருத்துக் களஞ்சியமாகிய காவியத்தை எழுப்புவார்கள். புதுமைப் பேற்றால் பழமையை வாழ வைப்பார்கள். புதுமையும் பழமையும் கலந்து புத்துருவெய்தி வாழும் அமர வாழ்வில் தாமும் ஐக்கியமாகிச் சாவாத் தன்மை அடைவார்கள். எண்ணிறந்த புலவர்க களிடையே கம்பர் வள்ளுவர் இளங்கோ ஆகிய இம்மூவர் மட்டும் இறவாப் புகழுடன் முதன்மைக் கண் வைத்து எண்ணப்படுவது ஏன்?

புதுமையான கருத்துக்களைச் சொல்லும் எல்லாரும் அறிஞர்கள். ஆனால் அவர்களுட் சிலரே கவிஞர்களாக இருக்க முடியும். அச்சிலருள்ளும் இருவர் ஒருவரே உண்மைக் கவியாக விளங்கமுடியும். பிரமன் உடலும் உயிருமுள்ள

உயிர்களைப் படைக்கின்ருன். கவிஞன் சொல்லும் பொருளுமுள்ள கவிகளைப் படைக்கின்ருன். பிரமன் படைப்பாகிய உயிர்கள் அழிந்துபோகின்றன. கவிஞன் படைப்பாகிய கவிகள் அழிவதில்லை. ஆதலின் பிரமனைக் காட்டிலும் கவிஞனே சிறந்தவன் என்று பழைய தமிழ்ப் பாட்டு ஒன்று சொல்கிறது. கடவுளாய்த் தோன்றி அழியும் பொருட்களைப் படைப்பதினும் மனிதனுய்ப் பிறந்து அழியாக் கவிப் பொருளை ஆக்குதல் எத்துணை அருமை! அவ்வருஞ் செயலை எல்லாரும் செய்தல் ஒல்லாது. அருள் பெற்ற ஒரு சிலரின் தனி உரிமை அது.

கவிக்கு அதன் சொல் உடல், அதன் பொருள் உயிர். அச்சொல்லும் பொருளும் இரண்டறக் கலந்து இழையும் இழைவினுற் பிறப்பதொரு நுண் சுவை இன்பமே கவிதை.

‘சொல்லும் பொருளும் சுவைபடல் இன்பம்’

அது பாடுவார் வாய்க்கு இனிப்பது, கேட்பார் செவிக்கு இனிப்பது, அவ்விருவருடைய உள்ளத்தையும் உருக்குவது. புதிய புதிய பொருட்கள் எப்படிப் புலவர் என்பவரின் இதயத் தடத்தில் மட்டும் மலரக் கூடுமோ, அப்படியே அப் பொருட்களைச் சிந்தையும் செவியும் களிக்கும் வண்ணம் செப்பும் செவ்விய சொற்களும் அப்புலவர் பெருமக்கள் நாவிலேதான் மலரக்கூடும். கலைமகள் நாவில் உறைகின்ருள் என்பதற்கு வேறு என்ன பொருள் இருக்க முடியும்? ஆகையால்தான், பாடுகின்றவனையெல்லாம் கவிஞன் என்று மதிக்க முடியாது, இளங்கோ போன்ற ஒரு சிலரைத்தான்

மதிக்க முடியுமென்று சொல்கிறோம். கவிஞனாகப் பிறப்பதற்கு அருள் வேண்டுவது போல, கவிஞன் ஒருவனைக் கண்டுகொள்தற்கும் அருள் வேண்டும் தான்.

இளவேனிலும் இனிய தென்றலும் எங்கும் கமழ் மலரும் கண்டால் மாங்குயில் மனம் விட்டுக் கூவுகின்றது. கூவுவது அதன் குணம் மட்டு மன்று, அது அதற்கு இன்பமுமாகும். மேகம் எழக்கண்டு ஆடுவது மயிலுக்கு இன்பம். கதிரவன் வரவு கண்டு களித்து இதழ் உடைந்து மலர்வது தாமரைக்கு இன்பம். சூல் உளைந்து முத்தினை ஈனுவது சிப்பிக்கு இன்பம். மனம் நெகிழ்ந்து பாடுவது புலவனாய்ப் பிறந்தவனுக்கு இன்பம். இவற்றையெல்லாம் கண்டும் கேட்டும் களிப்புறுதல் மனிதராய்ப் பிறந்த நம் எல்லார்க்கும் இயற்கை. உணர்ச்சி தந்து உள்ளத்தை உருக்குவது கவி.

மனிதன் வாய்திறந்து பேசத்தொடங்கி, அப் பேச்சு மொழியாகி, அம்மொழி வழக்காகி, மொழி வழக்கு முதிர்ந்து இலக்கிய நிலை எய்துகின்ற காலத்து முதற்கண் பிறப்பது கவிதை. அதன் பின்னர்ப் பிறப்பதே உரைநடை. உள்ள நிகழ்ச்சி மெய்ப்பாடாகப் புலப்படுவது முதல்நிலை. அதுவே கவிதையாகப் புலப்படுத்தப்படுவது இரண்டாவதாகிய உயர்நிலை. மெய் இயக்கமாகிய ஆடல் மனத்தை இயக்கிப் பாடலைப் பிறப்பிக்கின்றது. வேட்டையாடல், விளையாடல், புனலாடல், போராடல் முதலிய ஆடல்களில் ஈடுபட்டுத் தன் உள்ள நிகழ்ச்சிகளைச் சொற்றொடராக ஓசை நயத்துடன் வெளியிட்டதே கவியின் பிறப்பு, அதன் இளம் பருவநிலை. பண்ணை என்னும் விளையாட்டில்

பிறக்கின்ற மெய்ப்பாடுகளைச் சுவையமைந்த பொருளாய்க்கொண்டு, உவமை முதலிய அழகு தரும் உறுப்புக்கள் பொருந்திச் செய்யுள் பிறக்கின்றது என்ற இக்கருத்தை மனத்திற்கொண்டே ஆசிரியர் தொல்காப்பியனார், 'பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்' என்று தொடங்கும் முதற்சூத்திரத்தால் மெய்ப்பாட்டியலை எடுத்து, அதன்பின் உவம இயலை அமைத்து, அதன்பின் செய்யுளியலை வைத்தனர் போலும்!

மனிதனது ஆடலிடத்துப் பிறந்த கவி உணர்ச்சி உருவமானது. உணர்ச்சிகள் எட்டு. அவற்றை வெளிப்படுத்தும் மெய்ப்பாடுகளும் எட்டே. அதாவது மனிதனது உள்ளத்துணர்ச்சி எல்லாம் எட்டாக அடங்கும். அவற்றுள் மனிதனுக்கு உவப்பானது இன்ப உணர்ச்சி ஒன்றே. மெய்ப்பாடுகள் எட்டும் சொல்லும் ஆசிரியர்,

> 'நகையே அழுகை இளிவரல் மருட்கை
> அச்சம் பெருமிதம் வெகுளி உவகை'

என்னுமிடத்து, நகையினை முதலிடத்துப்பெய்தது காரணமின்றியன்று. ஆடல்வகை அனைத்தினும் அவன் இன்பத்தையே நாடினான், அதனையே பாடினான். இன்பத்துள் இன்பம் காம இன்பம். ஆதலின் பாட்டுக்கள் பெரும்பாலும் காமச்சுவைப் பாட்டுக்களாய், அகத்திணைப் பாட்டுக்களாய் இருப்பது இயற்கையே. இன்பத்துக்காகவே பாடிய காலம் சங்ககாலமும் அதற்கு முந்திய காலங்களும். காட்டு மனிதன் நாட்டு மனிதன் ஆனான். ஊர்கள் தோன்றி நகர்களாயின. பயிர்த் தொழிலைத் தொடர்ந்து கைத்தொழில்கள் வளர்ந்தன. இரண்டையும் தழுவி வாணிபம் பிறந்தது.

அரசியல் தோன்றிற்று. மொழி வழக்கில் உரை நடை ஆக்கம் பெற்றது. இன்பக் கவிதைகள் பொருள்மாற்றம் பெற்று, முதுமொழிக் காஞ்சி, பொருண்மொழிக்காஞ்சி, வாயுறைவாழ்த்து செவியறிவுறூஉ ஆகிய அறிவுரைகட்குக் கருவி யாயின.

இன்பமே நிறைந்து இன்பமே பயந்த இளங் கவிதைக்காலம் மறைந்து, வாழ்க்கை விதிகளையும் விலக்குகளையும் எடுத்தியம்பும் வளர்ச்சிநிலையைப் பழந்தமிழர் உணர்ந்தனர். இவ்வளர்ச்சி நிலையைத் தடுத்தலுமொண்ணாது, அது இன்றியமையாததும் தான் என்று கண்டனர். ஆயினும் இளங்கவிதை பிலிற்றிய இன்ப மதுவினை மறந்துவிடுதல் அவர் களால் இயலாததொன்று. ஆதலின் என்ன செய் தனர்? இன்பப்பாட்டுக்களை நெடும்பாட்டு, குறும் பாட்டு, கலிப்பாட்டு, வரிப்பாட்டு, பரிபாடல் என்று அகப்பாட்டுக்களாகத் தனிவைத்து வளர்த் தனர். ஏனை வாழ்க்கைத்துறைப் பாட்டுக்களைப் புறப்பொருட் பாட்டுக்களாகப் பிரித்துவைத்துப் பேணினர். கடைச்சங்க காலத்து இந்நிலை சமணர்காலத்தில் மாறியது. இன்பக்கவிதைக்குக் குழிதோண்டப்பட்டது. அறம் உரைத்தல் ஒன்றே பாட்டின் குறிக்கோளாயிற்று.

தமிழ் வளர்க்கவந்த இளங்கோவுக்கு இரண்டு பணிகள் எழுந்தன. பழங்கவிதையை அதன் பண்பு குன்றாது காக்கவேண்டும், தமிழ் இனத்தின் வாழ்வைத் திருத்தும் அறிவுரையும் பகர்தல்வேண் டும். அதாவது தமக்கு முந்திய பழங்காலத்தில் அகமும் புறமுமாய் இருபாற்பட்டொழுகிய பாட்டை ஒருபாற்படுத்தல் வேண்டும்; அதன்பால் கவிச்

சுவையும் இருக்க வேண்டும், ஒழுக்க உரையும் இருக்க வேண்டும். எனவே, அவருடைய கானல் வரி முதலிய இசைப்பாட்டு விகற்பங்கள் கவிதைச் சுவைக் களஞ்சியமாயின. கண்ணகி கதையும் அதனை உரைக்கும் அகவற்காதைகளும் ஒழுக்கச் சுரங்கமாயின. அறிவாலும் அறத்தாலும் மட்டும் வளர்ந்துவரும் சமூகம் கவிதையில்லாக் குறையால் இளைத்து மாயும் என்று கண்ட அடிகளின் அறிவெல்லையை யார்தாம் அளக்க முடியும்? கட்டுக் கதைகளும் கற்பனையில் பிறக்கும் மயக்கவுணர்ச்சியும் மனித வாழ்வுக்கு எத்துணை நலம் பயக்கின்றன!

இன்பமாகிய அகப்பொருளும், அறமும் பொருளுமாகிய புறப்பொருளும் இளங்கோவில் இணைகின்றன. அவ்விணைவால் கதைக்காப்பியம் உருவாகின்றது. பழைய தனிப்பாட்டு முறை மறைகின்றது. ஆயினும் 'அக்காப்பியத்தில் அகச்சுவையும் புறச்சுவையும் மரமும் அதனைத் தழுவிய கொடியும்போல் இரண்டாகவே பிரிந்து அழகுற நிற்கின்றன. கவிதைச் சுவை ததும்ப நீதியுரைத்து, படிப்பார்க்கு இன்பம் செய்தலும் அவர்தம் மனத்தைப் பண்படுத்தி வளர்த்தலுமாகிய இரண்டு பயனையும் ஒருங்கே தரும் முதுகவிதை உருவாகவில்லை. கம்பனில்தான் அதனைக் காண்கின்றோம். அவனே கவிதையின் முடிந்த எல்லையைக் கண்டான். அதற்கு அவன்மட்டும் பொறுப்பாளியல்லன். வீரன் தென்சிங்கும், ஹில்லரியும் இமயச்சிகரம் ஏறிய வெற்றிக்கு அவரோடு சேர்ந்தவர்களும், அதற்குமுன், பிறர் இமயம் ஏற எடுத்த தோல்வி முயற்சிகளும், அம்முயற்சிகளில் உயிரிழந்

தோறும், இவ்வனைவர்க்கு முதவிய விஞ்ஞான ஏதுக்களும் உதவி செய்துள்ளனவன்றோ? இன்பமே பொருளாய் எழுந்த மிகமிகப் பழைய இளங் கவிதைக் காலமுதல், கி. பி. பதினோராம் நூற்றுண்டுவரை இலக்கியம் நன்றும் தீதுமாக எய்தி வந்த எல்லா மாறுதல்களும் சேர்ந்து, கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பனைப் படைத்துவிட்டன. அவன் பல்மீன் நடுவண் பால்மதிபோல கவிஞர் குழாத்திடை உலா வருகின்றான். அவனுக்கு நிகர் அவனேதான்.

உணர்ச்சி உருவாகிய முதிராப்பழங்கவி எங்கே, கம்பனது முதுகவிதையாகிய கலைப் படைப்பு எங்கே? பண்ணைத்தோன்றிய குழவிக் கவிதை எத்துணைப் பெரியவளாக வளர்ந்துவிட்டாள்! இன்று அவள் இன்பமும் பயக்கின்றாள், அறமும் பகர்கின்றாள். இன்பத்தால் இம்மைப் பேறும், அறத்தால் மறுமைப்பேறும் நல்கும் தெய்வத்திறல் கவிக்கு இருக்கின்றது. அதாவது, கவி செய்யும் புலவர்கட்கு இருக்கின்றது. கவியினைக் கொண்டு சாத்தனார் பௌத்த நெறி காத்தார். திருத்தக்கதேவர் சமணநெறி காத்தார். சமய குரவர்கள் சைவம் தழைக்கச் செய்தனர். ஆழ்வார்கள் வைணவம் வளர்த்தனர். பாரதியார் நாட்டுணர்ச்சியைப் பரப்பினார். கம்பர், தமிழும் சமயமும் நீதியும் ஒழுக்கமும் அரசியலும் போரியலும் இன்பமும் துன்பமும் எல்லாம் கலந்தியங்கும் ஒன்றே, தம்காலத்து மனிதன் வாழ்க்கை என்பதைக் கண்டார். இந்த ஆரவாரப் பன்மைகளிடையே அவன் சலியாது வாழ ஒளியளிக்கும் உயர்நூலாக இராமாவதாரத்தை இயற்றினார்.

அவர் காட்டிய வாழ்க்கை வழியின் சாரம் அவரது இப்பாட்டில் ஒருவாறு அடங்கியிருப்பதாக நாம் கருதலாம்.

‘ ஏகம் முதல்கல்வி முளைத்துஎழுந்து எண்ணில் கேள்வி
ஆகம் முதல்திண் பணைபோக்கி அருந்த வத்தின்
சாகம் தழைத்து அன்பு அரும்பித் தருமம் மலர்ந்து
போகம் கனியொன்று பழுத்தது போலு மன்றே’

கல்வியிலேயே மனிதனுடைய வாழ்க்கை தொடங்குகின்றது. கேள்வியில் வளர்கின்றது. புலனடக்கத்தில் தழைக்கின்றது. அன்பில் பூக்கின்றது. தருமத்தில் பரிமளிக்கின்றது. இன்பத்தில் முதிர்கின்றது. மனிதவரலாற்றுப் படியில் உச்சநிலை எய்திவிட்ட தமிழர்க்கு இதைக்காட்டிலும் உயர்ந்த உரையாது?

இளங்கோ வாழ்ந்த காலம் வேறு. அக்காலத்துத் தமிழகத்தின் நிலையும் வேறு. எனவே, அவர் தம் காலத் தமிழர்க்குச் சொல்லவேண்டிய செய்தியும், ஆற்றவேண்டிய பணியும் வேறு வேறாக இருந்தன. தமிழினம் சமண பௌத்த வைதிக சமய வரம்புகளைக் கடந்து ஒன்றுதல் வேண்டும். முத்தமிழும் ஒருங்கு ஓங்குதல் வேண்டும். *மன்னன் செங்கோல் கோடாது ஆளுதலும், மக்கள், அச்சமே கீழ்களது ஆசாரம் என்பதற்கொப்ப

---

* ‘ அரைசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றுவதாஉம்
உரைசால் பத்தினிக்குயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினை உருத்துவந்தூட்டும் என்பதாஉம்’

‘ வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தர் கொற்றம் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு’

ஒழுகாமல், அண்டபேரண்டங்களையும், அவற்றி லுள்ள ஒவ்வோர் அணுவையும் அணுவிற் சிறிய கோணையும், பொருள் பொதிந்த பெருநோக்கத் துடன் தவருது இயக்கும் ஊழினை மதித்து வாழு தலும் வேண்டும். நாட்டில் நல்லாட்சி நிலவுதற் கும், மக்கள் இயற்கையின் கோபத்துக் காளாகாது அதன் அருள்பெற்றுச் சீர்மிக வாழ்தற்கும் அடிப் படையாய் இருப்பது மாதர் கற்பே.

ஆட்சித்திறத்தாலும் நிதிச்சிறப்பாலும் மக் கள் வாழ்வு மலருமென்று இக்காலத்திற்போலவே அக்காலத்தினும் நம்பியிருந்தனர். இளங்கோ அக்கொள்கையினை மறுக்கவில்லை. ஆனல் அவ் விரண்டும் செம்மையாக அமைவதற்குரிய உயிர் நிலை ஒன்றைச் சுட்டிக் காட்டினர். அன்றும் இன்றும் யார்தாம் அதனை நம்புவர் ? பெரியோர்கள் சொல்லும் பேருண்மைகளை எக்காலத்தினுமே கல்விச் செருக்கும் செல்வச் செருக்குமுடைய நகர வாசிகள் நம்பமாட்டார்கள். ஏழைத் தமிழர்கள் நம்புவார்கள். அத்தகைய நல்ல பண்புடையது அவர்கள் உள்ளம். இளங்கோ இவ்வியல்பை அறிந்து, தாம் சொல்லும் அவ்வுண்மையினை ஆயர்குலத்து மாதரியின் மூலம் நமக்கு அறிவித் துள்ளார்.

நாட்டின் வாழ்வுக்கும் வீட்டின் வாழ்வுக்கும் காரணமாய் இருப்பவள் பெண். அவள் படைக்கும் கடவுளல்லள், ஆனல் காக்கும் கடவுள். அக்கடவுட் பயிரை அழிக்கும் வேர்ப்புழுவாக வந்தன புதிய சமயக் கருத்துக்கள் ; அதற்கு மாசு உண்டு பண்ணிவந்தது பொய்யும் வழுவும் கலந்த களவு ஒழுக்கம். இவ்விரண்டனையும் ஒருங்கே அழிக்கும்

ஒரே விடையாகத் தம் காப்பியத்தை ஒரு மணப் பந்தலில் தொடங்குகின்றார் அடிகள். அகத்திணை புறத்திணைத்துறைகள் சான்றோர் வகுத்த இலக்கண இலக்கியங்களில் வருமாறே தம் காப்பியத்திலும் ஆங்காங்குப் பயின்றுவரப் பாடிய அவர்க்குத், தமது இளங்கண்ணகியையும் கோவலனையும் களவு பயிலும் காதலர்களாகக் காட்டுதல் அரிதன்று. களவு பெண்ணின் பெருமைக்கு இழுக்கென்பதே அவர் முதற்கண் காட்டும் புதுநெறி; புதுநெறியன்று, அவர் புதுக்கிக்கொடுத்த தமிழ்த் தொன்னெறியாகும்.

## II

சங்க இலக்கியங்கள் தமிழ் மக்களுடைய ஒழுக்கத்தை அகம் புறம் என்றிரண்டாக வகுத்துக் கூறுகின்றன. அவற்றுள், அகமாவது இல்வாழ்க்கையிற் பெறும் காதல் இன்பம்; புறமாவது இல்லறம் நிகழ்த்தற்கு வேண்டிய பொருளை ஈட்டும் ஆடவனது முயற்சியினது அருமைப்பாடு. அகம் என்பது, களவு கற்பு என்று இரண்டு ஒழுக்கங்களாக விரியும். அவ்விரண்டனையும் மேலும் விரித்துரைத்தால் அவை குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என ஐந்தாகும். இவ்வைந்தனுள் குறிஞ்சி, களவு என்னும் ஒன்றனுள் அடங்கும். ஏனை முல்லை முதலிய நான்கும் கற்பினுள் அடங்கும்.

களவு அல்லது குறிஞ்சியாவது, மணம் முடித்தற்குமுன், பதினாறு ஆண்டு நிரம்பாத இளைஞன் ஒருவனும் பன்னிரண்டு ஆண்டு நிரம்பாத மங்கையொருத்தியும், பிறர் அறியாமல் மறைவிற் கூடி

வரும் ஒழுக்கம். அக்கூட்டம் இருவர் தம் உள்ளக் கூட்டம் மட்டுமன்றி உடற்கூட்டமுமாகும். இவ்வாறு களவிற் குறிஞ்சி நிகழ்த்திய காதலர்கள், பின்னர்ப் பெற்ரேரும் பிறரும் அறிய மணமுடித்துக்கொண்டு இல்வாழ்க்கை செய்தல் கற்பொழுக்கமாகும். அதன் கூறுபாடுகளாகிய முல்லை முதலிய நான்கும் தலைவனது பிரிவால் தலைவி எய்தும் மனத்துன்பத்தினையே குறிக்கும். துன்பமே எனினும் தன் உரிமைத் தலைவனை நினைந்து நினைந்து அவள் ஏங்குதலும், பிரிந்து சென்றவிடத்து வினைமுடித்துக்கொண்டு பொருளுடனும் புகழுடனும் அவள்பால் திரும்பி வருதலை எண்ணி எண்ணி அவன் ஏங்குதலும், ஆகிய இரண்டும் இருவர்க்கும் இன்பமாதலின், குறிஞ்சியில் கூட்டத்தால் பிறக்கும் இன்பத்தைக் காட்டிலும், அறத்தின் பொருட்டும் கடமையின் பொருட்டும் கூட்டத்தினை மறந்திருக்கும் நிலைமை தரும் பிரிவு–இன்பமே உயரிய இன்பமாகக் கருதப்படுகின்றது. பிரிவு நான்கும் பெண்ணின் ஒருமை உள்ளத்தைப் புலப்படுத்தி, அவள் அன்புக்குச் சிறப்புத் தருகின்றன. ஆனல் களவாகிய குறிஞ்சி அவளுக்குப் பெருமை தருவதா? அவ்வொழுக்கத்துக்கு அக்காலத் தமிழ்மக்கள் உடன்பட்டிருந்தார்களா? அதுபற்றி இளங்கோ என்ன கருத்துக் கொண்டிருந்தார்?

ஆசிரியர் திருவள்ளுவர் எழுபது இனிமைக் குறள்கள் சொல்லி இக்களவொழுக்கத்தை ஆதரித்துள்ளார். தொல்காப்பியனர் பொருளதிகாரத்தில் களவியல் அரங்கிற்குக் கொண்டுவரும் இளைஞனும் மங்கையும் வெவ்வேறு இடத்தினராயினும் ஊழி

ளுல் உந்தப்பெற்றுக் காதலராகின்றனர். அவனது வேட்கையை அவன் நாட்டங்கள் அவளுக்கு எடுத்துரைக்கின்றன. அவளும் தன் மனக் குறிப்பினைத் தனது நாட்டத்தாலேயே அவனுக்கு அறிவிக்கின்ருள். இவ்வாறு அவ்விருவர்தம் உள்ளங்களும் ஒன்றெனக் கலந்துவிடுகின்றன. மனத்தை அடக்கி அவர்கள் அந்த எல்லையிலேயே நின்று கொள்கின்றனர். அதற்குரிய காரணத்தையும் அவரே கூறுகின்ருர்.

'பெருமையும் உரனும் ஆடூஉ மேன'
'அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிவ வென்ப'

அவன், 'அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவம் அஞ்சுதலும் முதலியவாய் மேற்படும் பெருமைப் பகுதியும், கடைப்பிடியும் நிறையும் கலங்காது துணிதலும் முதலிய வலியின் பகுதியும்' உடையவன். அவள் 'அன்பு காரணத்தில் தோன்றிய உட்கும் காமக் குறிப்பு நிகழ்ந்தவழிப்படுவதோர் உள்ளவொடுக்கமும் கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமையும் முதலியன எஞ்ஞான்றும்' தன் இயல்களாக உடையவள். தம் பிறப்பாலும் பயிற்சியாலும் சிறப்புடைய மேன்மக்களது காதல் வரம்பு கடந்து சிறுமை செய்வதில்லை.

காதல் கூர்ந்தும் தம் நிலை தடுமாருமல் ஒழுகும் பெருமையுடையோர் சிலரே. ஏனைப்பலர் தாம் பிறந்த குடிக்கும் தம் ஒழுக்கத்துக்கும் தகாதது செய்வோர். தம் நெஞ்சும் நிறையும் தடுமாறி வேட்கை மிகுதியால் வெய்துண்டார்போல்

புண்கூறும் புல்லியர் அவர். அவர்களைப் பற்றியும் அவர் களவியலில் காண்கின்றோம்.

நீதிநூற் புலவரும் இலக்கணப் புலவருமாகிய இவர்கள் செய்தி இங்ஙனமிருப்ப, இலக்கியப் புலவர்கள் இவரின் வேறுபட்ட கருத்துடையரா யிருப்பர் என எதிர்பார்த்தல் வேண்டா. கபிலர் தலைமையில் அவர்கள் பாடிய குறிஞ்சிப் பாட்டுக் கள் எண்ணில. பேராசிரியர்களாகிய இப்பேரறி ஞர்கள் யாவரும் ஒருங்கே கூறும் கவி யொழுக்கம் தமிழர்க்கே உரிய வாழ்க்கை ஒழுக்கம் எனப் பலர் எண்ணி மயங்கியதில் வியப்பில்லை. இப்புலவர்கள் யாவரும் களவுக்கூட்டத்தை ஆதரித்து, அருமை யும் இனிமையும் கனிய முழங்கும் முழக்கத்தி னிடையே, அது சிறந்த ஒழுக்கமன்று என உறுதி யுடன் முழங்கும் தமிழ்ப் பொதுமக்களின் இடிக் குரல் நமது காதுகளில் தொனிப்பதையும் இலக்கி யத்திலேயே காணலாம்.

தலைவன் ஒருவன் களவொழுக்கத்தில் ஈடுபட் டிருப்பது அவன் தோழனுக்குத் தெரிகின்றது. அவன் தலைவனைப் பார்த்து,

> 'நன்றறிந்து
> தாமுறையே செய்வார் தகவிலவே செய்தக்கால்
> யார்முறை செய்பவோ மற்று'

என்று கூறி அவனைக் கண்டிக்கின்றான். ஆனால் அவன் அதற்குச் செவிசாய்ப்பதாய் இல்லை. 'கொடிச்சி கையகத்ததுவே பிறர், விடுத்தற்கா காது பிணித்த என் நெஞ்சே' என்று கூறித் தன் காதலியை நோக்கி விரைகின்றான். அங்கே, தன் தலைவி களவொழுக்கம் பயில்வதை அறிந்து கொண்ட அவள் தோழி, தலைவன் வரவை எதிர்

பார்த்துச் சினத்துடன் இருக்கின்ருள். போன விடத்தில் அவன், அவள் கண்ணிற்பட்டு விடுகின்ருன். அவள்,

‘ கல்லோங்கு சாரற் கடிபுனங் காத்தோம்பு
நல்கூர்ந்தார் மாட்டு நயந்தொழுகித்—தொல்வந்த
வான்ருேய் குடிக்கு வடுச்செய்தல் தக்கதோ ’

என்று பேயும் இரங்கும்படி உருக்கமாகக் கேட்கின்ருள். ‘உலகத்தில் நடப்பதைப் போல, நீர் அவளை வரைந்து கொள்ளும்’ என்று அறிவுரை கூறுகின்ருள். அவன் மேலும் அங்கேயே நின்று கொண்டிருப்பதைப் பார்த்து, ‘ இப்போது எங்கள் தாய் வந்துவிடுவாள். எம்முடையவர் உம்மை இங்குக் கண்டாலே காய்வர். யாம் கானக வாழ்க்கையுடைய குறவரேயாயினும் இத்தகைய ஒழுக்கம் எங்களுக்கு நீங்காப் பழியாகும்’ என்று அச்சுறுத்துகின்ருள். அவன் அதற்கும் அசைந்து கொடுக்கவில்லை. இனிச் செய்வது என் ? தோழனும் தோழியும் தலைவனுக்கும் தலைவிக்கும் இரங்கிப், பின்னர்த் தாமே அவர்கள் களவொழுக்கத்துக்குத் துணையாகின்றனர். செய்தி பின்னர் ஊரார்க்குத் தெரிந்துவிடுகின்றது. செல்வச் செருக்குடைய பெரிய வீட்டுப் பிள்ளைகள் களவொழுக்கம் புரிந்தால் அது உடனேதானே பெரும் பேச்சாய்க் கிளம்புவதில்லை. முதலில் அடக்கமாக ஒருவரோடொருவர் பேசிக்கொள்கிருர்கள், பின்னர் ஊரெங்கும் அதே பேச்சாய் எழுகிறது. ஊர்வாய்க்குப் பயந்து தலைவன் தலைவியை வரைந்து கொள்தற்கு விரைகின்ருன்.

புலவர் பெருமக்களால் இலக்கியங்களில் நாட்டப்பட்ட ஒழுக்கம் ஒன்றுக்கு நாட்டிலும்

வீட்டிலும் இருந்த ஆதரவு இது! அவ்வாருயின், நாட்டில் வழக்கிலிருந்த ஒழுக்கந்தான் யாது?

புலவர்களால் நாட்டப்பெற்ற இலக்கிய வழக்கம் ஒன்று, பொதுமக்களிடையே பழமையாக நிலை பெற்று வந்த வாழ்க்கை வழக்கம் மற்ருென்று. இவ்விரண்டுக்கு மிடையே அகப்பட்டு மக்கள் உழன்றனர். அதனைத் தெள்ளிதின் விளக்கும் இலக்கியச் சான்றுகள் பலப்பல. அவற்றுள் **கலித்தொகையில்** வந்துள்ள ஒன்று காண்பாம்.

வாரி நெறிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த
வோரிப் புதல்வ னழுதன னென்பவோ
புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் கண்டு மதியறியா
வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று;
சென்றியா னறிவேன் கூறுக மற்றினி;
சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக் கொருஉ மற்றென் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் கூறு;
தருமணற் ருழப்பெய் தில்பூவ லூட்டி
எருமைப் பெடையொ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாம் தனித்தே யொழிய
வரிமணல் முன்துறைச் சிற்றில் புனைந்த
திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ வலர்ந்த
விரிநீருடுக்கை யுலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணங் கூடுதல் இல்இயல்பு அன்றே.

களவொழுக்கத்தில் ஈடுபட்டிருக்கும் ஓர் இளநங்கை யின் கூற்று இது. அவள் தன் தோழி மூலம் தன்

காதலனுக்கு ஒரு செய்தி சொல்லியனுப்புவதாக இப்பாட்டு அமைந்திருக்கின்றது. திருமண மாகாமல் களவொழுக்கத்தில் நிற்கும் காதலர்களது செய்தியைச் சொல்லும் இது குறிஞ்சியாக இல்லா மல், மணத்துக்குப் பின்னர் உரிய கற்பொழுக்கத் திணைச் சார்ந்த முல்லையாக இருப்பதின் நுட் பத்தை மனதில் தெரிந்துகொண்டு, இதன் பொருளை ஆய்தல் வேண்டும். அதில் வரும் தலைவிக்கு மண மாகவில்லை. ஆனால் அவள் 'எனக்குத்தான் மண மாகிவிட்டதே' என்று ஏங்கித் துடிக்கும் துடிப்பின் குரலாக இது இருக்கிறது.

அவளைப் பெண்கேட்டு வந்திருக்கின்றனர்கள் ஒரு மாப்பிள்ளை வீட்டார். இச் செய்தி தெரிந்தும் அவள் காதலன் தன் பெற்றோரை யணுகி, அவ ளோடு தனக்குரிய தொடர்பினை அவர்களிடம் வெளிப்படுத்தி அவளைத் தான் மணந்துகொள்ள முயலாது அழுதுகொண்டிருக்கிறான். உண்மையில் அவன் அழவில்லை, ஆனால் அழுவான்போன்று மிக்க துயரெய்தி வாளா விருக்கின்றான். அது பற்றித் தலைவிக்குக் கவற்சி மிகுவதாயிற்று. அவள் தன் தோழியிடம் சொல்லுகிறாள்: "தாய் தனக்குத் தலைவாரி முடிக்கும்படியான பச்சைப் பிள்ளையா இன்னமும் அவன்? என்னைப் பெண் என்று பேசி மற்றொருவனுக்கு மணம் நடத்த ஒழுங்கு செய்கின்றனர்களே! இவன் வாளா அழுது கொண்டிருந்தால் என்ன ஆகும்? 'நீ ஒரு பேதை, உன்னை நம்பி இவ்வொழுக்கத்தில் இறங்கினேனே' என்று அவன் முகத்துக்கு நேரே சொல்லி, நம் வயிற்றெரிச்சல் தீர, அவனை எள்ளிச் சிரித்து விட்டாவது வா."

தோழியும் தலைவனைக் கண்டு செய்தி சொல்லி வர இணங்குகிருள். எனவே, மேலும் அவளைப் பார்த்துச் சொல்கிருள் தலைவி, "வாய்திறந்து பேசாமல் இருப்பையாயின், இம்மணத்தை இழப் பாய். தோழியர் கூட்டத்தினின்றும் பிரிந்து, தனித்து வந்து கூடிய ஒரு மணம் எனக்கு முன் னரே உன்ஞேடு நடந்துவிட்டது. உரியோரும் பெரியோரும் கூடி எருமைக்கோடு நட்டு, அதில் தெய்வத்தை ஏற்றி, இப்போது எனக்குச் செய்ய நினைக்கும் பெருமணம் இனி எனக்கு அடாதது. இந்த உலகமே பொருளாய்க் கிடைப்பினும் இரண் டாம் மணம் செய்தல் எங்கள் குலவழக்கமன்று என்று அவனிடம் சொல்."

களவு பொதுமக்களிடையே பெருவழக்காக, அவர்கள் ஒப்பியதொரு ஒழுக்கமாக இருந் திருப்பின், இரண்டு இளம் உள்ளங்கள் இவ்வாறு துடித்துத் துன்புறவேண்டுவதில்லை. நாட்டிலுள்ள வழக்கப்படி, அவளுடைய பெற்ருேரிடம் அவளைப் பெண்கேட்டு, வேறு ஒரு மாப்பிள்ளை வீட்டார் வந்திருக்கின்ருர்கள். அந்த வரன் அவர்களுக்குப் பிடித்து, அவர்கள் அவளை அவனுக்குக் கொடுக்க இசையும் நிலைவரைக்கும் காரியம் முதிர்ந்து விட்டது. அவளது மணத்தின் பொருட்டு, வீட்டைச் செம்மண்கொண்டு தீற்றுதல், முற்றத் தில் புதுமணல் பரப்புதல், திருமண வேதிகை அமைத்தல், அதன்கண் கடவுட் குறியாக ஆயர் குலத்துக்குரிய எருமைக்கோட்டினை நடுதல் முதலிய முன்னேற்பாடுகளைப் பற்றி வீட்டிலுள்ள வர்கள் மகிழ்ச்சியுடன் பேசிக்கொள்வது அவள் செவியில் விழுகிறது. மற்ரெருவஞேடு மற்ரெரு

மணமா? பிழைசெய்து பேதுற்ற அவள் தூய சிறு உள்ளம் அதனை எண்ணவும் நடுங்குகிறது. சமூகத் திட்டங்களும் சடங்குகளும் அவளுக்கு எதிரே பெருவெள்ளமாய்ப் புரண்டு வருகின்றன. தன் தோழியின் துணையை நாடுகிருள்.

தோழி தொடக்கம் முதல் இக்களவுக்குத் துணை புரிந்தவள். தலைவன் பகற்குறி இரவுக்குறி வருதற்கு ஓடிஓடி உதவியவள். இரண்டு குடும்பத்துப் பெரியோர்களும் கூடிச் செய்வதாகிய அப்பெரு மணம் இவளை எதிர்பார்த்துச் செய்யப்படுவதன்று. 'தலைவனிடம் ஓடிப்போய்ச் செய்தியைச் சொல்' என்கிருள் தலைவி. இதற்குமுன் அவள் பன்முறை தலைவனைச் சந்தித்தவிடத்துத் தக்கவாறு பேசித் தன் பேச்சாற்றலையும் மதிநுட்பத்தையும் புலப்படுத்தியவள். இப்போது தலைவனிடம் சென்ருல் என்ன பேசுவது என்று அறியாது திகைக்கின்ருள். இன்னின்னவாறு பேசு என்று தலைவி அவளுக்குக் கற்பித்தனுப்புகின்ருள். தனக்குக் கற்பிக்கப்பட்டவாறே அவள் தலைவிக்கும் தலைவனுக்குமிடையே எந்திரம் போலத் திரிந்து கொண்டிருக்கிருள்.

அவளோ உண்மையை உரைக்கப் பயந்து அழுதுகொண்டிருக்கிருள். இறுதிவரை வாய்திறவாமல் வாளா இருந்துவிடுதலும் கூடாது. அங்ஙனமாயின் அவன் அவளை இழப்பதுடன், அவள் கற்புக்குக் கேடு சூழ்ந்தானுமாவன்!

பொறியில் சிக்கிய இந்த 'எலிகளின்' நிலைமை இவர்தம் பெற்ருேர்க்குத் தெரியாது. நாட்டு முறைப்படி, தமது பிள்ளைகள் உரியபருவம் எய்தி விட்டதைக் கண்டு, அவர்கட்கு மணம்செய்து

பார்த்து மகிழும் நோக்கத்துடன் அவர்கள் அதற்கு ஆவனசெய்ய விரைகின்றனர்கள்.

இவர்களில் யாருக்காக இரங்குவது நாம்! நல்ல குடும்பம், அந்தக் குடும்பத்திலே பிறந்து வளர்ந்த நல்லொழுக்கமுடைய பெண் என்று நம்பி, அங்குவந்து அவளைப் பெண்கேட்டானே வரன், அவனுக்காக நாம் இரங்க வேண்டுவதில்லை. தன்னை நம்பிவந்து கைப்பிடிக்கும் கணவன் பொருட்டு தன் உள்ளத்தையும் உடலையும் புனித மாகப் பேணிவரும் மற்றோர் உயர்மகள் அவனுக்கு மனைவியாகக் கிடைப்பாளாக. நமது ஆயர்குலச் சிறுமியின் கற்புச் சிதையாவண்ணம் அவள் காதலனே அவளை மணப்பானாக.

இனி, இவ்வளவில் இவர்களை விட்டுவிட்டு, தமிழ்நாட்டின் மலைப் பகுதிக்குச் சென்று, அங்கே இவ்வாறு களவொழுக்கம் பயின்ற வேறு இருகாதலர்களையும் அவர்கள் தோழியையும் காண் பாம். **அகநானூற்றில் நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர்கிழார்** என்னும் புலவர் பெருமகனார் சொல் லும் செய்தி அது.

ஈன்றணிமையையுடைய புலி பசித்து எழுந்து, களிற்றியானையை அடித்துண்ணும் மலைவழியில் நள்ளிரவில் தலைவியை நாடிவந்திருக்கின்ற அஞ் சாத்தலைவன், அவனை ஒருநாள் பிரியினும் உயிர் வாழாத காதல் தலைவி, அவளுடைய உயிர்த் தோழி—இம்மூவரும் முல்லைப்பாட்டில் நாம் கண்ட மூவரையும் போன்று மடமையுடையவர்கள் அல்லர். நிலைமை தம் கையைவிட்டுக் கடப்பதின் முன்னரே வதுவை அயர்தல் நன்றெனஎண்ணும் கருத்துடையோர். தோழி சொல்கிறாள் :

'* * * *

நாளிடைப் படின்என் தோழி வாழாள்
தோளிடை முயக்கம் நீயும் வெய்யை
கழியக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
வரையின் எவனோ வான்தோய் வெற்ப !
கணக்கலை இருக்கும் கறியிவர் சிலம்பின்
மணப்பருங் காமம் புணர்ந்தமை அறியார்
தொன்றியல் மரபின் மன்றல் அயரப்
பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினேம் போலஇவள்
புதுநாண் ஒழுக்கமும் காண்குவம் யாமே?'

'கழிபெருங்காதல் உடையோர் ஆயினும், சான்றோர்கள் பழியுடன் வரும் இன்பத்தை விரும்ப மாட்டார்கள். நீ இவளை மணம்செய்து கொண்டாலென்ன? நமது பழமையான முறைப்படி திருமணம் நடத்துவதற்கு இவளைப் பெண்கேட்டுவா. உங்கள் களவு ஒழுக்கத்தை யாருமே அறியார்கள். ஆதலினாலே, நீ வரும்நாளிலே நாங்கள், முன்னர் உன்னைக் கண்டறியாத புதியவர்களைப் போல நடந்துகொள்கிறோம். இவளும் முதன் முதல் உன்னைக் கண்டு நாணுவதுபோல நடித்துக் கொள்வாள்.'

அறிவுடைய தோழி தலைவனுக்குச் சொல்லும் இவ்வறிவுரையில், தமிழ்மக்களின் தொன்றுதொட்டு வரும் பழைய மணத்தைப் பற்றிக் கேள்விப்படுகிறோம். களவொழுக்கம் தமிழர் பெண்கொள்ளும் ஒழுக்கம் அல்லவென்பதும் அவள் வாக்கால் புலனாகின்றது. மேலும், களவுபுரிந்தவர்களும் தமிழர்க்கே உரிய அத் 'தொன்றியல் மரபின் மன்றல்' வாயிலாகவே தம் குற்றத்தைப் பிறர் அறியாமல்

மறைத்துத் தமக்கு உய்திதேடி யிருக்கின்றனர். ஐயர் யாத்த கரணம், தொன்றியல் மரபின் மன்றலுக்கு அமையா வகையில் பொய்யும் வழுவும் மிகைபடப் பயின்றவர்க்குப் பெரியோர்கள் வகுத்ததொரு மணமுறையாக இருத்தல் வேண்டும். ஐயர் யாத்த கரணம் களவொழுக்கமுடையார்க்கு உரியது. தொன்றியல் மரபின் மன்றல், அன்று தொட்டு இந்நாள்வரை களவொழுக்கம் அறியாத தலைவனுக்கும் தலைவிக்கும் இருவரது பெற்றோரும் கூடிப்பேசி முடிப்பதாகிய பெருமை மிக்க மணமாகும்.

சேக்கிழார், காரைக்காலம்மையார்க்குத் தமிழ்ப் பெருமணமே செய்து வைக்கின்றார்; ஐயர் யாத்தகரணமன்று. நிதிபதி என்னும் வணிகன் தன் மகனுக்கு மணம் பேசிவரும்படி தன்குலத்துப் பெரியோர்களைக் காரைக்காலுக்கு அனுப்புகின்றான்.

‘ வந்தமூ தறிவோர்கள் மணங்குறித்தம் மனைபுகுந்து
தந்தையாந் தனதத்தன் தனைநேர்ந்து, நீ பயந்த
பைந்தொடியை நிதிபதிமைந் தன்பரம தத்தனுக்கு
முந்தைமர பினுக் கேற்கு முறைமை மணம்
[புரிகென்றார் ’

அவனும் அதற்கிசைந்து,

‘ திருமலியும்,
சுற்றமுடன் களிகூர்ந்து வதுவைவினைத் தொழில் பூண்டான் ’.

மற்றுமோர் எடுத்துக்காட்டு : திலகவதியார்க்கும் கலிப்பகையார்க்கும் திருமணமே நடக்கவில்லை. ஆயினும், கலிப்பகையார் போரில் இறந்த செய்தி கேட்டுத், திலகவதியார்

‘ எந்தையுமெம் மனையுமவர்க் கெனைக் கொடுக்க
இசைந்தார்கள்
அந்த முறையாலவர்க்கே உரியது நான் ’

என, வேறு மணத்தினை மனத்தினும் கருதாராய்க் கைம்மைபூண்டு தமிழ்ப்பெண்மையை விளக்கினர். இந்தத் திலகவதி–கலிப்பகையின் சோக வரலாற்றில் ஒரு காதலைப்பற்றிக் குறிப்பிடுகின்றார் சேக்கிழார். அது, அவர்கள் ஒருவர்மீது ஒருவர் கொண்ட களவுக் காதலன்று. கலிப்பகையாருடைய தந்தை முதலியோர் புகழனாருடைய புதல்வியாகிய ஒப்பில் சிறப்புடைய திலகவதியைத் தம் மகனுக்குக் கொள்ளவேண்டுமென்று கொண்ட காதலே.

‘ பூண்டகொடைப் புகழனார்பாற் பொருவில்மகள் கொள்ள
வேண்டியெழுங் காதலினால் மேலோரைச் செலவிட்டார்.’

உயர்ந்த குடும்பங்களின் பண்பு வேறு எவ்வாறு இருக்கமுடியும் ?

பரஞ்சோதியாருடைய திருவிளையாடற்புராணத்தில், தமிழர் தொன்றியல் மரபின் மன்றல் பற்றிய குறிப்பு ஒன்று காட்டுவாம். பட்டினத்திலேயுள்ள ஒரு குலவணிகன் தன்மகட்கு மண முடித்த செய்தியை,

‘ முத்தமிழ் மதுரைப் பதியுளா னவர்க்கே
முறையினால், நோற்று நான் பயந்த
வித்தக மயிலைக் கொடுப்பல் என்றுஅனைய
வியன்குல வணிகர்கோன் தன்னோடு
ஒத்தபல் கிளைஞர் யாவருமறிய உணர்த்தினன் ’

என்று கூறியுள்ளார்.

சங்க காலத்துக்கு முன்னிருந்து பரஞ்சோதியார் காலம்வரை, இன்றுவரை தமிழருக்கு உடன்பாடான மணமுறை தொன்றியல் மரபின்

மன்றலே. அதில் எவ்வகை மாறுபாடும் ஏற்பட்டுள்ளதாக இலக்கியக் குறிப்பு இல்லை. அது பெரியோர்கள் கூடிக் குடும்பப் பெருமைகளைப் பேசிப் பெருமையோடு செய்யும் பெருமணம். அதனைக் கடிமணம் என்னும் செந்தமிழ்ப் பெயராலும் வழங்கினர். மணம்நிரம்பிய மணப்பந்தலில், மணவறையில் முதன் முதலாகச் சந்தித்து மாப்பிள்ளையும் பெண்ணுமாக வாழ்தற்கு இணங்கும் புத்தம் புதிய சடங்கே கடிமணம் எனப்படும் தகுதி வாய்ந்தது. யாரும் அறியாமல் இருவர் மலையிடங்களிலும் மரச்சோலைகளிலும் விலங்கு பறவைகளைப் போன்று தம்மன இசைவே காரணமாகக் கூடிப் பழகிய பின்னர்ச் செய்யப்படும் ஐயர் யாத்த கரணம் கடிகணம் எனப்படும் மணம்கமழும் புது மணமாதல் எங்ஙனம்?

மனித இனத்துக்குக் குறிஞ்சி என்னும் மலையிடமே வாழிடமாக இருந்த பழங்காலத்தில், களவு ஒன்றே மக்கள் மணமுறையாக இருந்திருத்தல் வேண்டும். நாகரிகமற்ற அப்பழைய வழக்கத்தை வாழ்க்கைத்துறையனைத்திலும் நாகரிகம் முற்றிய பிற்காலத் தமிழரது இலக்கிய இலக்கணங்களில் காண்கின்றோம். தொல்காப்பியர் கபிலர் வள்ளுவர் போன்ற புலவர் பெருமக்கள் அத்துணைப் பிற்போக்காளர்களா? மலை முதலிய நால்வகை நிலங்களும், அந்நிலங்கட்குரிய பெரும்பொழுது சிறுபொழுதாகிய முதற் பொருட்களும் தெய்வம் முதலிய கருப் பொருட்களும் உரிப்பொருளாகிய ஒழுக்கங்களைப் பற்றிய புனைந்துரைக் கவிகட்குப் பின்னணிகளாயின. நால்வகை நிலங்களினும், மரங்களும் செடிகளும் கொடிகளும் பூக்களும்

புட்களும் விலங்குகளும் எண்ணற்றுச் செறிந்து இயற்கைவளங் கொழிக்கும் மலையே கவிக்கு உறுப்பாக மிகமிக உதவுவது. நிலங்களில் மலை சிறந்ததுபோன்று, கவிகளில் காதல்கவி சுவைச் சிறப்புடையது. கவிமட்டுமன்றிச் சிறுகதை, புதுக்கதை, நாடகம் முதலிய இலக்கியப் படைப்புக்கள் யாவும் எல்லாக் காலங்களினும் எல்லா நாடுகளிலும் காதலையே பெரும்பாலும் பொருளாகப் பெற்றிருப்பதின் காரணம், அதுவே சுவைகளில் சுவை மிக்கது. ‘சுவை பலவென்பார் சொல்க. நான் ஒப்புவது சிருங்காரம் ஒன்றனையுமேதான்’ என்றான் **போசன்**. கலைகளில் இன்பச்சுவையினையே மக்கள் பெரும்பாலும் விரும்புகின்றனர். கவிஞர்களுக்கும் கவிதைவெறியூட்டும் கற்பனைக் களஞ்சியங்களாகப் பாரசீகப் பாடல்கள் இருப்பது இக்காரணம் பற்றியே. இதனாலேயே நமது கலித்தொகை கற்றறிந்தோர் ஏத்தும் கவிதையாகக் கனிந்து, கற்பவர் உள்ளத்தை உருக்குகின்றது.

சங்ககாலத் தமிழ்க் கவிஞர்களில் பாட்டிற் சிறந்த கபிலர் குறிஞ்சியையே பாடினார். களவுத் துறையில் நிற்கும் இளம் உள்ளங்கட்குமட்டும் காதல் உரியதன்று; மணம் முடித்துக்கொண்டு பொருள் தேடி அதனைப் பகுத்துண்டு வாழும் முதிய உள்ளங்களுக்கும் காதல் உரியதே. அக்காதலை முல்லை முதலிய நான்காகப் பகுத்துக் கொண்டு அவற்றை வைத்தும் கவிதை யாத்தனர் பிறபுலவர்கள். இவ்வாறு, பெரும்பான்மை கற்பனையும், சிறுபான்மை அவ்வக்காலத்து உலகியலும் பொருளாக அமைந்து நம் அகப்பாட்டுக்கள் தோன்றின.

' நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலநெறி வழக்கம்
கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்.'

எனவே, புலவர்கள் பிற்போக்காளர்கள் அல்லர். அவர்களுடைய கற்பனைச் சித்திரங்களாகிய கவி களைத் தமிழரது இலக்கிய வரலாறு என்று கொள் ளாமல், வாழ்க்கை வரலாறு என்று கொள்ளுதலே பிற்போக்காகும்.

களவு கற்பு என்ற ஒழுக்கத்துறைகளில், தலைவன் தலைவி, பாங்கன் பாங்கி, செவிலித்தாய் நற்றாய் என்று புலவர்களால் உணர்ச்சி உருவங் களாகப் படைக்கப்பட்ட கற்பனைப் பாத்திரங்கள் நாளடைவில் மக்கள் உள்ளங்களைச் சிறிது சிறி தாகக் கவர்ந்து கொண்டன. அவற்றின் வசப்பட்ட மக்கள் தங்கள் ஒழுக்கப் பொறுப்புள்ள நன்னடக் கைகளைக் கவிதைகளில் வரும் பொறுப்பற்ற அவ் வுல்லாச மனிதர்களின் நடக்கைகளைப் போன்று மாற்றிக்கொள்ளத் தொடங்கினர். இக்காலத்தில் காதல் கதைகளும், பத்திரிக்கைகளும், திரைப் படங்களும் பொழுது போக்குக்காக ஏற்பட்டவை மக்களின் முதிரா உள்ளங்களைக் கெடுத்து, அவர் தம் நல்லொழுக்கங்களைச் சிதைப்பனபோன்று, அக்காலத்துக் குறிஞ்சிப் பாட்டுக்களும் மருதப் பாட்டுக்களும் பிறவும் மக்கள் மனதைக் கெடுத் தன. புலநெறி வழக்கு உலகியல் வழக்காயிற்று. கள்போல்வது கவிதை. அதனை அருந்துதற்கு எல்லை வேண்டும். அளவறிந்து கட்டுப்பாட்டுடன் வாழ்வோர் எத்துணைப் பேர்? அதனால், மலைவாழ் வின் பழைய நாகரிகமற்ற பழக்கவழக்கங்கள்

மீண்டும் தலைதூக்கின. களவொழுக்கத்துக்கு அறிஞர்களுடைய ஆதரவு இருப்பதாக அறிவிலாச் சிறுவர்கொண்டனர். ஆண்–பெண் தொடர்பில் பொய்யும் வழுவும் மலிந்தன. ஆடவர் கெட்டனர். இளம் பெண்டிருங்கூடத் தம் உடலும் உள்ளமும் தூய்மை இழந்தனர். பெண் கெட்டால் எல்லாம் கெடும். அவள் கெடாதிருந்தால் ஒன்றும் கெடாது.

'வானம் பொய்யாது வளம்பிழைப்பு அறியாது
நீணில வேந்தர் கொற்றம் சிதையாது.'

கம்பர் போன்ற அறிஞர் யாவர்க்கும் உடன்பாடான கருத்து இது. அவரும் இக்கருத்தினை பிரமசாரிய ஒழுக்கம் பூண்ட அநுமன் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார். தென்னிலங்கை சென்று, அவன் அசோகவனத்தில் தேவியைக் காண்கிருன். காசுண்ட கூந்தலாளாக இருந்த அவளது கற்பும் காவலும் ஏசுண்டதில்லை என்பதை அறிகிருன். அப்போது, அவன் களிப்பால் ஆடினன் பாடினன், ஆண்டும் ஈண்டும் பாய்ந்து ஓடினன். உவகைத் தேன் உண்டு,

'அறத்துக்கு ஈறு உண்டோ?'
'வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால்'
'ஊழியின் இறுதிவந்து உறுமென்று எண்ணினேன்
வாழியர் உலகு இனி வரம்பில் நாளெலாம்.'

என்று கூறி உள்ளம் குளிர்ந்தான். பெண்ணின் க்றபே அறப்பயிர்க்கு வேலியாக இருக்கின்றது. அவள் கற்புடையவளாக இருக்கும்வரை ஊழியின் இறுதி வராது. உலகம் வாழும். தவசிகளுடைய கடுந்தவமும் மாதர்களுடைய மனத்தவத்தின் முன் எம்மாத்திரம் என்று கேட்கின்ருர் கம்பர்.

'வெங்கனல் முழுகியும் புலன்கள் வீக்கியும்
நுங்குவ அருந்துவ நீக்கி நோற்றவர்
எங்குளர்? குலனில் வந்து இல்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவம் நவிலற் பாலதே'

ஏகார வினு, எதிர்மறைப் பொருளது என்பது கூறல் வேண்டா. மனித வாழ்க்கையின் உயர்வும் தாழ்வும் பெண்ணின் கையில் இருப்பதாகப் பெரியோர் கண்டனர். அவள் மாசிலா மாணிக்கமாக விளங்கும்வரை உலகுக்கு ஓர் இடையூறும் இல்லை.

இவ்வண்ணம் வாழ்வின் உயிர் நிலையாக இருக்கும் தெய்வப் பொருளின் தூய்மை கவிச்சுவைக்குப் பொருளாகிக் கெடுவதை இளங்கோவடிகள் ஆதரிக்கவில்லை. முதற்கண் அறத்தை வலியுறுத்திப் பின்னர் இல்லறமே அறமாவது எனக்கூறி, அதன் பின்னர் அவ்வறத்துக்குத் துணையாகும் மனையாளின் இலக்கணங்கள் இன்னின்னவை என்று வகுத்த வள்ளுவர் பெருமான், தம் நீதி நூலில், களவு ஒழுக்கம் கூறும் குறள்கள் அமைத்த காரணம், ஒழுக்கம் அது என்று சுட்டுவதற்கன்று. பொறுப்புணர்ந்து இல்லறம் செய்து, பொருளும் ஈட்டிச் சலிப்பார்க்கு இன்பம் தரும் கவிதையமுது அளிப்பதன் பொருட்டோ, அன்றி, சமணரது சுவையற்ற நீதிப்பாக்களைக் கேட்டுக் கேட்டு, வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படும் கவிதைச் சுவையை மறந்த தமிழர்க்கு அதனையும் நீதியாக ஓதி நினைவுறுத்தற்கோ? அறியோம். வான்மீகியின் வைதேகி களவு அறியாக் கன்னிகை. கம்பரின் சானகி முன்நாள் மாலையில் முனிவரோடு வந்த கார்வண்ணனைக் கண்டு அவனோடு காதல் கூர்ந்து, இராமுழுவதும் தன் மனத்

தினை மாசுபடுத்திக் கொள்கின்றாள். மறுநாட்காலை இராமன் வில்லை நாணேற்றாது போயிருப்பின் அவள் அகத்தூய்மை யாதாகும்? காவியச் சுவை அளிப்பதன் பொருட்டு இராமனும் சீதையும் காதலர்களாயினர் போலும்!

III

இளங்கோ எஃகு உறுதி படைத்தவர். பெண்ணை இகழ்ந்து மக்கள் வாழ்வை அழிக்கச் சூழ்ந்த சதிக்கெதிரே ஒழுக்கம் வகுக்கப் பிறந்தவர். பெண்ணின் கடவுட்டன்மையை நிறுவப் புகுந்த புதுப்பணியில், அவளை யொட்டிய களவென்னும் 'பழந்தமிழ் மாசினையும்' புடைத்துத் தள்ளிவிட்டார். அவருடைய கண்ணகிப்பெண் களவறியாத ஒளிமணியாகின்றாள். அருந்ததிக்கற்பே பிறப்பு முதல் அவள் குணம். தண்கதிர்த்திங்களும் வெங்கதிர் ஞாயிறும் பூம்புகார் மக்களும் சான்றாக, அவளைப் புனிதச் சிறுபெண்ணாய் மணமேடைக்குக் கொண்டு வருகிறார் அடிகள். முப்பதாம் காதையில் வரம்தரு தெய்வமாக வானில் காட்சி அளிக்கும் கண்ணகி, முதலாம் காதையில் புத்தம் புதிய மலர் போல் புனிதமாகக் காப்பிய அரங்கில் காலடி வைப்பதே பொருத்தமாகும். அங்கே கடிமணம் என்னும் தமிழர் பெருமணம் நடக்கின்றது. எங்ஙனம்?

பெண்: போகம் நீள் புகழ் மன்னும் புகார் நகர் அதுதன்னில், மாகவான் நிகர் வண்கையினையுடைய **மாநாய்கனது** குலக்கொம்பர். பொற்கொடி போன்றவள். பன்னீராட்டைப் பிராயத்தினள். திருமகள் போன்ற உடலழகு, அருந்ததி போன்ற உள்ளழகு உடையவள். பிறபெண்கள்

தன்னைப் பாராட்டும் பண்பமைந்தவள். பெருமைக் குணங்களை விரும்பும் இயல்புடையவள். அவள் பெயர் கண்ணகி.

**பிள்ளை :** அவ்வூரில் **மாசாத்துவான்** என்னும் பெருஞ் செல்வன் மகன். பதினெட்டைப் பருவத்தன். கண்டோர் 'முருகனே இவன்!' என்று பாராட்டும் கட்டழகு வாய்ந்தவன். அவன் பெயர் கோவலன். இவ்விருவரையும்,

> இருபெருங் குரவரும் ஒருபெரு நாளால்
> மணவணி காண மகிழ்ந்தனர் ; மகிழ்ந்துழி
> யானை எருத்தத்து அணியிழையார் மேலிரீஇ
> மாநகர்க் கீந்தார் மணம்.

இருதிறத்துப் பெற்றோரும் உற்றோரும் கூடிப் பேசி, சந்திரன் உரோகிணியைச் சேர்கின்ற நல்ல நாளிலே மணமுடித்துத் தம் பிள்ளைகளை மணக் கோலத்தோடு கண்டுகளிக்க விரும்புகின்றார்கள். இக்காலத்திலும் திருமணமென்றால் குடும்பத்திலுள்ள பெண்களே முக்கிய பங்கெடுத்துக் கொள்வதைப் பார்க்கிறோம். சுற்றத்தவர்களைத் திருமணத்துக்கு வரும்படி அழைப்பது முதல், மணமக்களை வாழவைப்பது வரை பெண்களே செய்வர். அன்று காவிரிப்பூம்பட்டினத்திலும் பெண்கள் யானைமேல் அமர்ந்து, சுற்றத்தவர்களுடைய வீடுகளுக்குச் சென்று, அவர்களுக்கு மண அழைப்புக் கொடுக்கின்றார்கள்.

> மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணகத்து
> நீலவிதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்

முரசுகளும் முருடுகளும் முழங்குகின்றன. இடையிடையே சங்குகள் ஒலிக்கின்றன. மாமுது பார்ப்பான் சடங்குகள் செய்கின்றான். மணத்துக்கு

வந்த எல்லாரும் தாலியை ஆசீர்வாதம் பண்ணிக் கொடுக்கிறார்கள். அதனைக் கண்ணகியின் கழுத்திலணிந்து கோவலன் அவளை மணம் செய்து கொள்கிறான்.

மாலையில், நறுமணம் கமழும் பொற்கொடி போன்ற பூவையர்கள் கண்ணகியை அழைத்து வந்து, 'இன்று உன்னை அணைக்கும் உன் கணவன் கைகள் என்றுமே நெகிழாமல் அணைத்துக்கொண்டிருப்பனவாக' என்று மலர் தூவி வாழ்த்தி, அவளை 'மங்கல நல்லமளிமிசை' ஏற்றுகிறார்கள். கோவலன் முன்னரே சென்று, அங்குத் தன் இளமனைவியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றான்.

தொல்காப்பியர் வள்ளுவர் போன்ற புலவர்களது காலம் பற்றி இதுகாறும் நிலவிவந்த கருத்துக்கள் இப்போது உருமாறி வருகின்றன. எனினும் தொல்காப்பிய நூலாசிரியர் இளங்கோவின் காலத்துக்கு முற்பட்டவர் என்று நாம் எண்ணுவது ஒருக்காலும் மறுக்கப்படாது என்று நாம் நம்பலாம். கற்பியலில்,

'கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொடைக்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள்வதுவே'

'கொடுப்போ ரின்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான'

'மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க் காகிய காலமு முண்டே'

'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப'

என முறையாக ஓதப்படும் நூற்பாக்களை நோக்குமிடத்து, தமிழர் வரலாற்றில் மணமுறையின்

இயல்பினையும், அதன் சிதைவினையும் காணலாம். மேலோர் மூவர்க்கும் கீழோர்க்கும் ஆகிய கரணம் வேறு, ஐயர்யாத்த கரணம் வேறு. முன்னது, பெற்றோர் கூடிப் பிள்ளைகட்கு மணமுடித்து வைக்கும் தொன்றியல் மரபின் மன்றலாகிய பெருமணத்துக்குரியது. பின்னது, களவிற் கூடி யொழுகிய வழுவினர்க்கு உரியது.

> ' களவின் வழிவந்த கற்பும், பொற்பமை
> களவின் வழிவராக் கற்புமென் றுங்கு
> முற்படக் கிளந்த கற்புஇரு வகைத்தே.'

என்பதனால் காலத்தால் முற்பட்டது களவின் வழி வந்த கற்பே. களவு என்பது மணம் அறியா ஒழுக்கமாகவே நெடுங்காலமிருந்து, பின்னர் மனிதர் நாகரிகமடையத் தொடங்கிய பின்னரே களவின் வழிவந்த கற்பாக வளர்ச்சியுற்றியிருக்க வேண்டும். சீலத்தால் முற்பட்டது களவின் வழி வராக் கற்பேயாதல் வேண்டும். அது மணத்திலே தொடங்குவதாய் நாகரிகமடைந்த மனிதர் உடன் பட்டுத் தமக்குரிய ஒழுக்கமாக வகுத்துக் கொண்டது. அவ்வொழுக்கம் நடைமுறையில் நல்ல தென்றே காணப்பட்டது; ஆகையால், பொற்பமைந்த ஒழுக்கமாகப் போற்றப்பட்டு வந்தது. உலகத்துப் பல்வேறு நாட்டு மக்கள் அனைவர்க்கும் முற்பட்டு, நாகரிக ஏணியில் அடி வைத்தேறிய தமிழர், ஏனை எல்லார்க்கும் முற்பட்டே களவின் வழிவந்த முதிரா ஒழுக்கத்தை ஒழித்து, களவின் வழிவரா முதிர்நல் ஒழுக்கத்தைத் தழுவினராதல் வேண்டும். ஆகவே, முற்போக்கடைந்த இத் தமிழ்ச் சமூகம், பண்டைக் களவின் வழிவந்த கற்பினை நோக்கிப் பின்சென்றது எனின், அது

வரலாற்றுக்கு ஒவ்வாத கூற்று. அப்படி ஒருக்கால் அது சென்றதாயின் அது பிழையே, பிற்போக்கே.

மாதர்களுடைய கற்பின் அடிப்படையில்தான் நாகரிகமுள்ள சமூகம் எழுதல் கூடும். அவளைப் பற்றிய உரிமை ஒருவனுக்கே என்று உறுதிப் படாதவரை குடும்ப வாழ்க்கை இல்லை, பொருள் முயற்சி இல்லை. எனவே, தொழிலும் வாணிபமும், ஆட்சியியல் குடியியல்களும் இல்லையாம். இவை இல்லா மனித இனம் விலங்கினமே ; உலகமும் ஒரு பரந்த காடேயாம். மனிதன் படிப்படியாக இவ் வுண்மையை உணரத் தொடங்கிய காலம் முதலே அவன் நாகரிகமடையத் தொடங்கினன். பெண் ணின் இயல்பும் அதற்கு உதவியது. அவள் பிறவி யிலேயே ஒருமையுள்ளம் பெற்றவள். அவளது ஒருமையுள்ளமாகிய கற்பிலேயே மனிதர் வாழ்வு என்னும் அணிதேர் இயங்குகிறது. கற்பு வாழ்க்கை அறத்தைக் காக்கிறது. கடிமணம் கற்பைக் காக் கிறது. அக்கடிமணத்தைக் காத்துப் பிற்போக் கினை நோக்கிய தமிழரைக் காத்தார் தமிழடிகள்.

## IV

மனித வாழ்க்கை இன்பமும் துன்பமும் கலந்த தொரு கலவை. இரண்டும் நன்றுதாமெனினும் மனிதன் இன்பமொன்றையே நாடுதல் அவன் இயற்கை. உண்பதிலும் உறங்குவதிலும் இன்பம் கண்ட அடிப்படையிலிருந்து, அவன், பின்னர், நீரிலும், நிலவிலும், ஒளியிலும் வளியிலும், வெளி யிலும் வீட்டிலும் இன்பம் காணக் கற்றான். இம் மையில் மட்டுமன்றி மறுமையினும் இன்பத்தையே

நாடினன். இங்ஙனம் இன்பவேட்கைமிக்க மனிதனுக்கு எதிராக இருந்தது இயற்கை அல்லது சூழ்நிலை. அதனோடு போராடினன். ஒருமுறை சூழ்நிலை தோற்றது, மற்றொருமுறை அவன் தோற்ருன். இன்றளவும் யாருக்கு வெற்றி என்பது முடிவுருமலே போர் நடந்து கொண்டிருக்கிறது. முதற்கண் உடல் வலிமைகொண்டு போராற்றிய பண்டைப் பழமனிதனது பின்னேர், பின்னர்த் தம் உள்ளத்தறிவாலும், உள்ளத்தின் உள்ளமாகிய ஆன்மாவின் உணர்வாலும் இன்பம் காண உழைக்கலாயினர். உழைக்கும் உடலுக்கு உணவு வேண்டுவதுபோல உழைக்கும் உள்ளத்துக்கு உணர்ச்சி வேண்டுவதாயிற்று. உடல் உள்ளங்களின் களைப்பைப் போக்குவதற்கு நுகர்பொருளும் நுண்கலையும் இரண்டு ஏதுக்களாயின. ஆன்மாவுக்கு, அப்பாலுக்கப்பாலான கடவுட் செம்பொருள் இன்ப சாதனமாயிற்று.

நுகர்பொருள் உண்மை. அதனை நன்னெறியில் ஈட்டுதல் நல்வாழ்க்கை. கலையாவது கற்பனை, அல்லது கற்பனையிற் பிறந்த மெய். அது இசை, கதை, நாடகம், ஓவியம், காவியம், சிற்பம் என மலர்ந்தது. நூற்றுவர்க்குத் தொண்ணூற்ருென்பதின்மர் பொருள் முயற்சியில் ஈடுபடுகின்றனர்; ஒருவரே உழைப்பவரை மகிழ்விக்கும் கலைத்துறையில் முனைகின்ருர். அவருள் கவிஞரும் ஒருவர். இன்பப் பொழுதுபோக்காக எழும் கவிதை பெண் தன்மையுடையது. சுவைகளில் சிறந்த சுவையாக இன்பம் பயக்கும் கவிதைக்குப் பெண்ணே பொருளாக—உயிராக இருக்கிறது. தண்ணீரோடையும் தாரகை சூழ் தண்ணிலவும், தென்றலும்

மலரும், காவும் கரும்பும், சுரும்பும், யாழும் குழலும், மயிலும் குயிலும் பிறவும் தாதுக்களாக வரும் பாட்டே இன்சுவைப் பாட்டு. அது பெண்ணைக் கொண்ட காதற் பாட்டாகவன்றிப் பிறிது யாதாக இருக்க முடியும்? கவிதை மட்டு மென்ன, பிறகலைகளும் பெண்மை பிறங்குவனவே யன்றோ? சிற்பி வன் கருங்கல்லில் இரும்புளி கொண்டு மெல்லியலாகிய பெண்ணுருவையே படைக்கின்றான். தோள் பருத்து இடை சிறுத்துக் குழைந்து நிற்கும் அப்பெண் முன்னே மனம் நெகிழ்ந்து நிற்கின்றோம் நாம். காதலை எதிர் பார்த்து ஏங்கி நிற்கும் இளநங்கையே ஓவியனது மனத்திரையில் உருப்பெற்று உயிர்பெற்று எழு கின்றாள். இசையில், பெண்ணவாள் பாடும் பெண் குரலிசையே பெருஞ்சுவை பிலிற்றுகின்றது. கூத்தில் கூந்தலழகியாம் கோதையன்னத்தின் கூத்தே நம் மனம் கூத்தாடச் செய்கின்றது.

நம் அடிகள் கலையின் உண்மை அறிந்தவர். தமிழினத்தை நல்வழிப்படுத்தும் சான்றோரினத் தைச் சார்ந்த அவர், பெண்மைக்கும் தமிழுக்கும் உருகும் கவியுள்ளம் படைத்தவர்; தமிழ்ச் சோலை யில் தன்னிகரில்லாது இன்சுவைக் கவிதை மிழற்றும் கன்னிக் குயில். ஆனால், வாழ்க்கையை யும் கவிதையையும் பிரித்தறிய முடியாது குழம்பி உலைவுற்ற தமிழர்க்கு இரண்டின் திறமும் உரைத்த ஞானக்குயில். கவிக்குப் பொருளாகிய காதலை— வாழ்க்கைக்கு உதவும் காதல், கவிதைக்கு உதவும் காதல்; வாழ்க்கையை விளக்கும் காதல், அதனை அழிக்கும் காதல் என இரண்டாகத் தம் காப்பியத் தில் வரும் கோவலன், கண்ணகி, மாதவி, ஊர்பேர்

தெரியாத இருவர் ஆகிய இவர்கள் மூலம் விளக்கியுள்ளார்.

கண்ணகி காதல், கவிதைச் சுவையுடையதன்று, ஆனால் இம்மைக்கும் மறுமைக்கும், இருப்புக்கும் இறப்புக்கும் அப்பாற்செல்வது. ஆன்மத்தை ஆணி வேராகக் கொண்டது. செத்த உடலை எழுப்பும் திறம் படைத்து, வாழ்க்கைக்கு உதவுவது. கோவலன்—மாதவி காதல், உடலும் உள்ளமும் பற்றிய உண்மையுள்ளது, ஆனால் வாழ்க்கைக்கு உதவுவதன்று ; அதனைக் கெடுப்பது. ஊர்பேர் தெரியாத இருவர் காதல் கவிதைச் சுவை மிக்கது. பாடுவார் கேட்பார் யாவர் உள்ளமும் களியுறச் செய்வது. இம்மூவகைக் காதல் இயல்புகளையும் இன்னமும் சிறிது விளக்கமாகக் காண்போம்.

**கோவலன் :** மனையறம்படுத்த காதையில் கோவலனுக்குக் கண்ணகிமீதுள்ள கரையற்ற காதல் வெளிப்படுகிறது. காதல் வெறியில் அவன் மூச்செல்லாம் பேச்சாகி, ஒன்றன்பின் ஒன்றாக வருணனைகள் கிளம்பி வருகின்றன. அவனுடைய ஆத்திரத்திலும் வேகத்திலும் சொற்றொடர்கள் முன் பின்னாக முறை மயங்குகின்றன.

‘சிவபெருமான் தன் திருநுதலில் அணிந்திருக்கும் குழவித்திங்களைக் கண்ணகி! உனக்குத் திருநுதலாகவே தந்துவிட்டான். இலக்குமியே நீ. ஆதலின் உன்னுடன் பாற்கடலிற்பிறந்த திங்களைச் சிவபெருமான் உனக்கு நுதலாக அளித்ததைப்பற்றி எனக்கு மனவருத்தம் இல்லை. அவ்வாறே, மன்மத மன்னன், தம் பகைவரை வெல்லும் வீரர்க்கு அரசர்கள் படைக்கலங்கள் கொடுத்துப்

பாராட்டுவதைப்போல, ஆடவரை வெல்லும் தன் பெண்படைக்குத் தலைவியாக விளங்கும் உனக்குத் தன் கரும்பு வில்லை உன் இரண்டு புருவங்களாகக் கொடுத்ததைப்பற்றியும் நான் வருத்தமுறவில்லை. ஆனால், ஆறுமுகன் தன் சுடர்வேலைச் செங்கடை மழைக்கண் இரண்டாக உனக்கு ஈந்துள்ள காரணம் என்னை? என்னை வருத்தல்வேண்டு மென்பதுதானே அவன் கருத்து!

'மாயிரும் பீலி மணிநிற மஞ்ஞைநின்
சாயற்கிடைந்து தண்கா னடைந்தது.
அன்னம் நன்னுதல்! மென்னடைக் கழிந்து
நன்னீர்ப் பொய்கை நளிமலர்ச் செறிந்தது.
அளிய தாமே சிறுபசுங்கிளியே
குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த நின்
மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியும்
மடநடை மாதுநின் மலர்க்கையின் நீங்காது
உடனுறைவு மரீஇ ஒருவா வாயின.
நறுமலர்க் கோதைநின் நலம்பாராட்டுநர்
மறுவில் மங்கல அணியே அன்றியும்
பிறிதணி அணியப் பெற்றதை எவன்கொல்?
பல்லிருங் கூந்தல் சின்மல ரன்றியும்
எல்லவிழ் மாலையொடு என்னுற் றனர்கொல்?
திங்கள் முத்தரும்பவும் சிறுகிடை வருந்தவும்
இங்கிவை அணிந்தனர் என்னுற் றனர்கொல்?
மாசறு பொன்னே, வலம்புரி முத்தே
காசறு விரையே, கரும்பே, தேனே,
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே,
மலையிடைப் பிறவா மணியே என்கோ,
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ,
யாழிடைப் பிறவா இசையே என்கோ,

தாழிருங் கூந்தல் தையலே! உன்னை, நான் எவ்வாறு பாராட்டுவேன்?'

மங்கல வாழ்த்துப்பாடல், மனையறம்படுத்த காதை ஆகிய இவ்விரண்டு காதைகளிலும் வரும் நூற்றறுபத்தெட்டு அடிகளிலும் நாற்பத்து நான்கு

அடிகள், அவர்கள் இல்வாழ்க்கையில் நான்கில் ஒரு பகுதி, கோவலன் தன் காதற்பெருக்கால் கண்ணகியைப் புகழ்ந்து பாராட்டிய பேச்சாகவே கழிகிறது. அங்கே கண்ணகி தன் வாயால் ஒரு காதல் வார்த்தைகூடப் பேசியதாக இல்லை. ஆண்புரு தன்னைச் சுற்றிச்சுற்றிக் கூவிக்களிக்கும்போது பெண்புரு மடத்துடன் அமைந்திருக்கின்றது!

**கண்ணகி:** ஆணும் பெண்ணும் சமமானவர்களே. ஆனால் ஆண் பெண் அல்லன், பெண் ஆண் அல்லள் .என்று காந்தியடிகள் கண்டார். காதல் துறையிலும் இஃதுண்மையே.

‘ தூமப் பணிகள் ஒன்றித் தோய்ந்தால் எனஒருவார்
காமர் மனைவி எனக் கைகலந்து—நாமம்
தொலையாத இன்பமெலாந் துன்னினர் மண்மேல்
நிலையாமை கண்டவர்போல் நின்று.’

யாக்கையும் இளமையும், இன்பம்நுகர் காலமும், நுகர்ச்சிமீதுள்ள வேட்கைதானும் நீடித்திரா. ஆதலின், இளமை முதலியன உள்ளபோதே இன்பத்தை நுகர்ந்துகொள்ளுதல் வேண்டுமென்று கோவலனும் கண்ணகியும், காமனும் இரதியும் போல, சினங்கொண்டு படம்விரித்த பாம்புகள் இரண்டு பின்னிப் பிணைவதுபோல எல்லா முறையினும் இன்பம் நுகர்ந்தனர்.

அக்காலங்களில் கண்ணகி வாய்திறந்து காதலுரை பேசியதாக நமக்கு ஒரு குறிப்பும் இல்லை. கலைவல்ல கணவன் உவமை உருவகங்களாய் உரைக்கும் காதலைக் கேட்டு அவள் உள்ளம் குளிர்ந்தாள், அவள் உடல் தளிர்த்தது. அவள் உள்ளத்தின் ஆழத்தில் பொங்கிப் பொங்கி மடிந்த உணர்ச்சிப் பெருக்கே அவள் தன் கணவனது பாராட்டுரைகளுக்கு அளித்த பேசாப்பெருவிடை. அவள்

முகத்திலே பரவிய ஒளியும், மலர்க்கண்களில் நில விய வாளொளி மலர்ச்சியும், நாணத்தால் சிவந்து கனியும் கன்னங்களும் அவள் விடையினை விளக் கும் மெய்ப்பாடுகள்தாம். வாய்ப் பேச்சின்றி உள்ளக்கடலில் கிளர்ந்துமோதிய உணர்ச்சியும் மெய்ப்பாடுகளுமாக இருந்தது கண்ணகியின் காதல். ஆண் பெண் இருபாலாரினும் காதலுக்குத் தனி உரிமை பெற்றவள் பெண். அதனைப் புறம் விடாது அகத்தில்வைத்து இன்புறும் அருந்திறல் ஆடவர்க்கில்லை.

ஆடவரின் காதல் துடுக்குடையது, ஆரவாரம் மிக்கது, ஆழம் அறியாதது. 'இந்த இப்பிறவியில் மற்ருெரு மாதை என் மனத்திலும் தொடேன்' என்று இராமன் சீதைக்குரைத்தபோது, அவள், தன் அன்பின் ஆழத்தைப் புலப்படுத்தும் விடை ஒன்றும் கூறவில்லை, மனத்தினுள் எண்ணிக் கொண்டாள். அதுவே அவளுக்கு ஆன்மதிருப்தி யைக் கொடுத்தது. நம்பிக்கையிழந்து இலங்கை யிலே செத்துக்கொண்டிருக்கும்போது, 'எத்தனை எத்தனை பிறவி எடுத்தாலும் அத்தனை அத்தனை பிறவியிலும் நான் உமக்கே மனைவியாக வந்து வாய்க்கும்படி எனக்கு வரம் அருள்வீர்' என்று அநுமன்மூலம் தன் கணவனிடம் கரைந்து கேட் கின்ருள். அவளது ஒருமை உறுதி அவனையும் ஒருமைக்கு ஈர்த்து உய்விக்க அவாவுகின்றது. பெண்ணின் காதல் அவள் உரையைக் கடந்து, உள்ளத்தையும் கடந்து, இறப்புப் பிறப்பு எல்லா வற்றையும் கடந்து எல்லையற்றுச் செல்கிறது. விண்புக்க கண்ணகியுடன் கோவலன், பின்னர் மாதவியை மறந்துவிட்டுப் பிறப்புக்கள் பல

பிறந்து, இறுதியில் மகதநாட்டுக் கபிலைப்பதியில் புத்தருடைய பொன்னுரை கேட்டுப் பிறவிநீத்த பெற்றியனுகின்முன். கணிகையின் காமமயக்கில் வீழ்ந்த கயவனைக் கற்பின் காதலுடைய கண்ணகி நற்கதியிற் சேர்த்தாள். பெண்ணின் காதல் அத்தகையது !

**மாதவி :** ஆடவனுடைய காதல் பேச்சுருவ மானது, பெறவிழைவது. மனைவியின் காதல் கொடுத்துக் கொடுத்துத் திருப்தி எய்தாதது. பரத்தையின் காதலுக்குப் பாடம் செய்யவேண்டும். அழகுமட்டும் போதாது அதற்கு, அணிகலன்களும் வேண்டும். ஆடல் பாடல்களும் வேண்டும். முடித்த கூந்தல் கலைந்துவிடக்கூடாது. கட்டிய சேலை கசங்கிவிடக்கூடாது. சூடியமலர் வாடி விடக்கூடாது. காதல் நீடிப்பதற்கு இப்படி எத் தனையோ சிறிய காரியங்களிலும் பெரிய கவனம் செலுத்த வேண்டும். மாதவி கோவலனேடு கூடிய தால் சிதைந்த தன் கோலத்தை அடிக்கடி கண்ணுடி யின் முன் நின்று திருத்திக்கொள்கிருள்.

கலைஞன் கோவலன் கலையுணர்ச்சியில்லாத கண்ணகியைப் பிரிந்து கணிகையிடம் வந்தா னென்று கருதப்படுகிறது. பொருளாசையால் செய்யப்படும் களவுகளும் கொலைகளும் குற்ற மாகாவா ? அவன் மற்ருெருத்தியின் கணவன். அவன் மாதவியை நச்சியதும், அவள் அவனைத் தன்பால் இருத்திக்கொண்டதும் பெரும்பிழை. ஆனல் உரிமை இல்லை என்ற ஒரே காரணத்தால், தான் காதல்கொண்ட கோவலனை இழந்து விட்டு, இனி உயிர்வாழ்வதென்பதும் மாதவிக்கு இயலாது. கோவலன், மாதவி, கண்ணகி ஆகிய மூவர் மனத்

திலும் வெவ்வேறு உணர்ச்சிப் போராட்டம் நடக்கின்றது. போராட்டத்தினிடையே கோவலனும் மாதவியும் இன்புறுகிருர்கள். கண்ணகி துன்பமே உறுகின்ருள். உரிமை அற்ற மாதவிக்கு ஒரே ஒரு கவலைதான் உண்டு. அவன் என்றும் தன்னை விட்டுப் போய்விடாமல் தனக்குரியவனுக இருக்கும்படி அவள் முயற்சி செய்துவருகிருள். எல்லாக் கணிகைகட்குமுரிய பொறுப்பும் கவலையும் மாதவியின் மீதும் விழுந்தன.

இந்திரவிழா முடிந்துவிட்டது. கோவலன் முகத்தில் மகிழ்ச்சி இல்லை. அதனைக்கண்ட மாதவி துணுக்குற்ருள். அவன் தன் தவற்றினை உணர்ந்து கண்ணகியிடம் செல்ல எண்ணுகின்ருனோ? அல்லது இந்திரவிழாவின்போது தான் கண்ட மற்ருெரு 'மாதவியை' நச்சி, தன்பால் வெறுப்புக் கொண்டு விட்டானோ? காரணம் எதுவாய் இருப்பினும் அஞ்சவில்லை அவள். அஞ்சிப்பயனுமில்லை, ஆவதைச் செய்தல் வேண்டும்.

பத்துவகையான துவர்ப்பொருளும், ஐந்து வகையான விரைப்பொருளும், முப்பத்திரண்டு வகை ஓமாலிகைகளும் இட்டு ஊறிய நறுமண நீரில் மணம் கமழும் தன் கரிய கூந்தலை அலைத்துக் கழுவிக் குளித்தாள். கூந்தலைப் புகையில் உலர்த்தி, ஐந்துவகையாக வகுத்து அவற்றில் கத்தூரிக் குழம்பு பூசி வாரிக்கட்டினுள். கால்விரல்கள் முதல் கழுத்து, உச்சித்தலைவரை பரியகம், நூபுரம், பாடகம், சதங்கை, அரியகம் [இவை காலணிகள்], குறங்குசெறி [இது துடையணி], பருத்த முத்துக்களால் முப்பத்திரண்டு கோவையாகச் செய்த விரிசிகை என்னும் முத்து வடம் [இது அரை அணி],

கண்டிகை, தோள்வளை, மத்தகமணி, சூடகம், கைவளை, பரியகம், வால்வளை, பவழப்பல் வளை [இவை கை அணிகள்], முடக்கு மோதிரம், மணி மோதிரம், தாள்செறி [இவை விரலணிகள்], சங்கிலி, பூண்ஞாண், சவடி, சரப்பளி, முத்தாரங்கள் [இவை கழுத்தணிகள்], இந்திர நீலமும் வைரமும் அழுத்திச் செய்த குதம்பை என்னும் காதணி, தெய்வ உத்தி, வலம்புரி, தொய்யகம், புல்லகம் ஆகிய தலையணி ஆகிய அணிகலன்களைத் தன் உடலுறுப்புக்கள் மறையும்படி அணிந்தாள். 'கடலாட்டு விழாவுக்குச் செல்வோம், வாருங்கள்' என்று கோவலனைக் குதிரைமீதேற்றிக்கொண்டு, தானும் ஒரு வண்டியில் ஏறிக் கொண்டு கடற் கரைக்குப் புறப்பட்டாள். தன் அழகையும் அணியையும், யாழையும் இசையையும் நம்பி அவள் அங்குச் சென்றாள்.

ஊதுகிறவனுடைய குழலுக்குக் கட்டுப்பட்டு ஆடுகிற பாம்புபோல மாதவியின் ஆடலுக்கும் பாடலுக்கும் அடிமையாகிக் கிடந்தான் கோவலன். அவளும் பாடுவாள், அவனும் பாடுவான். இருவரும் பாடுவார்கள். பாட்டில் வளர்ந்தது காதல், காதலில் வளர்ந்தது பாட்டு. பாட்டிலும் காதலிலும் திளைத்தனர் கலைஞர் இருவரும். கோவலனுக்குக் கண்ணகி ஏற்றவளா? அன்றும்கூட காவிரிப்பூம்பட்டினத்தில் சிலர் அப்படி எண்ணியிருக்கலாம். ஒருவேளை கண்ணகியுங்கூட தன்னைப்பற்றி அவ்வாறே குறையுற்றிருக்கலாம். இன்றும் நம்மிற் பலர் இதே குறையைத்தான் கண்ணகி மீது சுமத்துகிறோம். கோவலன் அவளுக்கு ஏற்றவனல்லன் என்பதை மறந்துவிடுகின்றோம்.

பாட்டில் வளர்ந்த பரத்தையின் காதலில் ஐயம் என்னும் நச்சரவம் மூச்சுவிட்டது. 'எவளை எண்ணிப் பாடுகின்ருனே இவன்? என்று அவள் மனம் ஐயுற்றது. 'எவனை நாடிப் பாடுகின்ருளோ இவள்?' என்று அவன் ஐயுற்ருன். இன்று உலக வல்லரசுகள் ஒற்றுமையுற்று மக்களின் வாழ்வுக்கு ஆக்கம் தேடுவதை யொழித்து, அழிவுக் கருவிகளை ஆக்கிக் குவிப்பது ஐயத்தாலன்ருே? அத்துணைக் கேடு பயப்பது ஐயம். அவர்களுடைய கலை காதலைக் காக்க முடியாமற் கைவிட்டது. சாகிற வனுக்கு மருந்து ஏற்காததுபோல, மாதவின் அழகும் அணியும் அருமுயற்சியும் அமுதப் பாடலும் அவர்களுடைய காதலைக் காப்பாற்றக் கூடாமற் போயின. பாட்டால் வளர்ந்த காதல் பாட்டால் மடிந்தது. காதலை வளர்த்த கடற்கரை அதற்கு கல்லறையிடமாயிற்று. தன் குலதெய்வத்தின் பெயர்பூண்ட கண்மணிச் சிறுமகள் மணிமேகலையையும் துறந்துவிட்டுக் கோவலன், பத்துப் பன்னிரண்டாண்டுகட்குப் பின்னர்க் கண்ணகி என்னும் கற்பரசியின் காலடியை நோக்கி விரைகின்ருன். ஆடத்தெரியாத அப்பாதங்கள் இனி அவனது வாழ்க்கைப் புணை! உரிமையற்ற ஒருவனை நம்பித் தன் உடல் பொருள் ஆவி அனைத்தையும் படைத்த பேதைமகள் மாதவி மனமுடைந்து, தன் மகள் மணிமேகலையுடன் துறவுக் கோலம் பூண்டாள். அறியாச் சிறுமி மணிமேகலையை எடுத்து, அவளுக்கு ஒரு காப்பியம் கொடுத்து, அவளை ஆதரித்த சாத்தனுரை எண்ணுங்கால் நம் உள்ளம் நன்றிப் பெருக்கால் பூரிக்கின்றது.

*கானல் நீரால் தாகம் தீருமா ?*

**கானல்வரிக் காதல் :** இக் காதலுக்குரியவர் யாருமில்லே. இரண்டு காதலுள்ளங்களின் ஏக்கம் போல, புலவர்கள் புனைந்து பாடும் நாடகக் காதல் அது. கேட்கும் செவியும், பாடும் நாவும் தித்திக்கும் தீங்கவிதை அது. அதனை வாழ்க்கையிற் கொண்டுவந்து பயில்தலாகாது. கலை இன்பமாகிய கவிச்சுவை ஒன்றே அதன் பயன். இத்தகைய கவிதைகள் சிலம்பில் பலவுள. அவற்றுள் சில காண்போம்

இரண்டு காதலர்கள், தமது உடலும் உள்ளமும் உயிரும் காதலால் துடிப்பதுபோல, இம்மண்ணும் விண்ணுமே தம் காதலுணர்ச்சியால் துடிப்பதாக மயங்கித் திரிகின்ருர்கள். அவர்கள் மனம் கடிவாளமில்லாத காட்டுக் குதிரைகள். அவன் பாடுகின்ருன் :

பொழில்தரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணேஇள வனமுலேயே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்இணேயே
எழுதரும் மின்இடையே எனேஇடர் செய்தவையே.

இதற்குப் பதில் குரல் கொடுக்கிருள் அவள் :

கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே
எதிர்மலர் புரையுண்கண் எவ்வநீர் உகுத்ததுவே
புதுமதி புரைமுகத்தாய் போனர்நாட் டுளதாங்கொல்
மதியுமிழ்ந்து கதிர்விழுங்கி வந்தஇம் மருண்மாலே.

அவன் பாட்டொலி மறுபடியும் கேட்கிறது :

கொடுங்கண் வலேயால் உயிர்கொள்வான் நுந்தை
நெடுங்கண் வலேயால் உயிர்கொல்வை நீயும்
வடங்கொள் முலேயால் மழைமின்னுப் போல
நுடங்கிஉகும் மெல்நுசுப்பு இழவல் கண்டாய்

ஆழியும் அலையும், அன்னமும் பொழிலும், அவற்றோடு தானும் கலந்து அவள் வாயிற் பொங்கிவரும் கவிதை அமுதம் :

நேர்ந்தநம் காதலர் நேமிநெடுந் திண்டேர்
ஊர்ந்தவழி சிதைய ஊர்கின்ற ஓதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடும் அன்னமே
ஈர்ந்தண் துறையே இதுதகா தென்னீரே.

மழைத்துளியைக் குடித்துக்கொண்டே உயிர் வாழும் வானம்பாடி போன்றவர்கள் இவர்கள். இவர்களைப் போன்றவர் கதைகள் நாடகங்கள் திரைப் படங்களுக்குக் கதாபாத்திரங்களாக வருவதற்கன்றி வேறு எதற்கு ஆவர் ?

பெண்ணைச் சூழ்ந்து முளைத்தது வாழ்க்கைப் பயிர். அவளைச் சூழ்ந்தே எழுந்தது கவிதைப் பயிரும். இரண்டும் இன்பம் செய்வனவே. வாழ்க்கையில் வருபவள் உண்மைப் பெண். அவள் மாசு சிறிதுமின்றி தூய்மையாக இருத்தல் வேண்டும். கவிதையில் வருபவள் கற்பனைப் பெண். அவள் உடல் உறுப்புக்களைப் பாடலாம். உள்ளத் துணர்ச்சிகளைத் தொடலாம். அவளோடு பாடலாம், ஆடவும் செய்யலாம். வாழ்க்கையை விளக்குவதும் காதல், கவிதைக்கு உயிர்ப்பாய் இருப்பதும் அதுவே. இவ்விரண்டன் வேறுபாடும் உணராமல் கவிதைப் பெண்ணை வாழ்க்கைக்கும், வாழ்க்கைப் பெண்ணைக் கவிதைக்கும் கொண்டுவந்ததால் அடிகள் காலத்தில் தடுமாற்றம் ஏற்பட்டிருந்தது. பொறுப்பற்ற காதல் வாழ்வில் பெண்ணும் ஆணும் தகா இன்பம் வெஃகிப் பெருமை குன்றினர். சமணர் அத்தகைய இன்பத்தைக் கடிந்தது அறவுணர்ச்சியுடைய ஒரு சாரார்க்கு உடன்பாடாகப்

பட்டது. அச்செயல், நோயை ஒழிக்காது நோயாளி யையே ஒழிக்கும் முயற்சியாயிற்று. இளங்கோ 'வாழ்க்கை வேறு, கவிதை வேறு. இரண்டும் வேண்டும். ஆனல் அது அது, அதன் அதன் எல்லேக்குள் நிற்றல் வேண்டும்' என்று தெளிவு செய்தார்.

மாதவியின் கலேதரு காதல் உண்மையானதா யினும் உரிமையற்றது. அதனல் இறுதியில் துன்ப மும் ஏமாற்றமுமே. வரிக்காதல் முதலியன கவிதை இன்பம் துளும்புவன. அலுத்த உள் ளத்தை ஆற்றுவன. கருத்தோடு உழைத்த மனிதன் சிறிதுநேரம் கவலேயற்று உலாவுதற்கு உதவும் இன்பப் படகு. ஆனல் வாழ்க்கையில் துளி கலந்தாலும் நஞ்சாகும் இயல்பினது.

கண்ணகியினது உரிமை அன்பு, பண்பிலும் பயனிலும் அமுதமாவது. வாழ்விலும் தாழ்விலும் உடன் நிற்பது. சாவிலும் தொடர்ந்து வழிக் கொள்வது. சாவினேயும் கடந்து அதற்கு அப்பா லும் அப்பாலும் ஒன்றிக்கொள்வது. அது, அறியாச் சிறுவர் இருவர் விளேயாட்டாகத் தொடங்குதலி னும் அறிந்த பெரியோரது வினேயாட்டாகத் தொடங்குதலே பெண்ணுக்கும், பெண் பிறந்த குடும்பத்துக்கும் யாவர்க்கும் பெருமையாகும். ஆட வனுடைய பெருமைக்கும் உரனுக்கும், பெண்ணி னுடைய அச்சத்துக்கும் மடனுக்கும் நாணுக்கும் குற்றம் உருவகையில் அவர்களேக் கூட்டிவைத்த லாகிய பெருமை மணமே தமிழர் கண்ட பெரு மணம், கடிமணம். இளங்கோ வற்புறுத்துவதும் அதனேயே. களவின் வழிவராக் கற்பமைந்த கண்ணகியின் பொற்பினே இனிக் காண்போம்.

# 3. பெண்ணுள்ளம் கண்ட பேருள்ளம்

## I

இளங்கோ அரசு துறந்திருந்த அடிகள் என்பது கதைத் தலைவியாகிய கண்ணகி வாக்கால் கூறப்பட்டுள்ளது. வெட்டுண்டு இறந்த கோவலன் மீண்டும் உயிர்பெற்று எழுந்து கண்ணகியின் கண்ணீரைத் துடைத்தது, அவள் மார்பில் எழுந்த தீயால் மதுரை மாநகர் எரிந்து சாம்பராகியது, அவள் வானவூர்தி ஏறி விண்புக்கது முதலிய பல செய்திகள் கதைகளில் நிகழக்கூடியனவேயன்றி வரலாருகக் கொள்ளத் தக்கனவல்ல. எனவே, கண்ணகி கல்நின்ற கற்புத் தெய்வமாய் வெளிப்பட்டுச் சொன்ன இளங்கோ வரலாறு நம்பத் தகுவதாகுமா?

துறவு பூணுமல் இல்லறம் புரிந்துகொண்டு, ஞான ஒழுக்க முடையோராய்த் திகழ்பவர்களையும் அடிகள் என்பது நந்தமிழ் மரபாகும். உலகினர் மகாத்துமா என்று அழைத்த காந்திப் பெரியாரை நாம் 'காந்தியடிகள்' எனக் குறிக்கின்ருேம். மதுரைவாசியாகிய மாதரி, மற்ற ஆய மகளிரைப் பார்த்து,

> 'சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின்
> நாத்தூண் நங்கையொடு நாள்வழிப் படூஉம்
> அடிசிலாக் குதற் கமைந்தநற் கலங்கள்
> நெடியா தளிமின் நீர்'

எனக் கூறுமிடத்துக், கோவலனை 'அடிகள்' என்று குறிக்கிருள். அதே கொலைக்களக் காதையில், கண்ணகி சமையலை முடித்துக்கொண்டு, தன் கணவனை உண்ணுவதற்கு அழைக்கும்போது,

'குமரி வாழையின் குருத்தகம் விரித்தீங்
கமுதம் உண்க அடிகள்'

என, அவனை 'அடிகள்' என்று விளிக்கிருள். இக் கோவல அடிகளுக்கும், இளங்கோவடிகட்கும் ஒழுக்கத்தில் என்ன வேறுபாடு? குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்தவர் மணஞ் செய்து கொண்ட துறவியா? மணஞ் செய்துகொள்ளாத துறவியா? ஆனல் ஒன்றுமட்டும் அவரைப்பற்றி நாம் நிச்சயமாகச் சொல்லக்கூடும். அதாவது, வீட்டை வெறுத்து, நாட்டை வெறுத்து, வாழ்க்கை யையும் வெறுத்துக் காட்டையே விரும்பிச் சென்று, கடுந்தவம் புரியும் எல்லாம் துறந்த துறவியல்லர் அவர். தாம் உய்வதன்பொருட்டே மூச்சடக்கி உயிர்வாழ்ந்த முனிவரும் அல்லர் அவர். பலப்பல பற்றுக்கள் அவருக்கு உண்டு.

தமிழ், தமிழ் நாடு, தமிழன், தமிழ்ப்பண்பு என்ருல், அவை அவருக்கு உயிரினும் அதிகம். தமிழைத் தாமும் அமுதம் எனப்பருகி, எல்லாரும் பருகி இன்புறும் அமுதமாக்கியும் கொடுத்திருக் கிருர். இப்போது உயிருடனிருக்கும் எந்தத் தமிழ் நூலினும் இல்லாத தனிச் சிறப்பாக, அவருடைய நூலில் எத்தனையெத்தனை வகையான யாப்புக்களை யும், இசைப் பாடல்களையும் காண்கின்ருேம்! தீங்கவிதைத் தேன் பிலிற்றுவது அவர் உள்ளக் கமலம். தமிழ் நாட்டை மூன்று நாடாகப் பார்த்த னர் பிறர். அவர் தமிழ்உள்ளம் அதனை ஒரே ஒரு நாடாகக் கண்டது. தமிழரசர் பெருமை கனவிலும் அவர் மனத்தைவிட்டு அகன்றதில்லை. கோவலன் பிரிவால் மனம் உடைந்து உயிர் பிரிந்த உடலாய்ப் படுக்கைக்குச் செல்லும் மாதவிகூட,

'மாயிரு ஞாலத்து அரசு தலைவணக்குஞ்
சூழி யானைச் சுடர்வாட் செம்பியன்
மாலை வெண் குடை கவிப்ப
வாழி மால்வரை யகவையா வெனவே'

என்று சோழனை வாழ்த்திக் கொள்கிருள்.

மற்ருெரு பெரிய பற்றும் இளங்கோவுக்கு இருந்தது. துறவிகள் யாவரும் எதனை மிகமிக வெறுக்கின்ருர்களோ அதனை அவர் மிகமிக விரும்பினுர். அவருடைய மதிப்பில், உலகில் இறைவனுடைய படைப்பில் பெண்மையே அழகு உடையது, இனிமை உடையது, பெருமையுடையது, வலிமையுடையது, எப்பொழுதும் எண்ணத் தக்கது, கவியும் காவியமுமாக ஏற்றிப் போற்றத் தக்கது, எல்லாராலும் வணங்கத்தக்கது. ஏனென்ருல், அன்பின் பொருட்டு அன்பு செய்வது அது ஒன்றுதான். அன்புக்காக உயிர்வாழும் அது, அன்பின்பொருட்டு ஆற்றும் அருஞ்செயல்களைக் காணுமிடத்து, அதனை ஊனுடலில் கோவில் கொண்டிருக்கும் தெய்வமெனவே அவர் கொண்டார். அவள் உடலழிந்த பின்னும் அவளை இயக்கிய அன்புத்தத்துவம் நித்தியமாக வாழும் பொருட்டு அவளுக்கு ஆலயங்கள் எடுக்கவேண்டுமென்ற ஆசை அவரைத் தூண்டியது.

## II

கண்ணகி உதயத்துக்கு அடிகளின் ஆசை மட்டும் காரணமன்று. காலமும் ஒரு காரணம். தமிழக வரலாற்றிலே அவர் கண்ட காலம் ஒரு நற்காலம். தமிழ் வேந்தர்களும் ஒருவருக்கொருவர் தாழ்ச்சியின்றி, 'அறனும் மறனும் ஆற்றலும்'

உடையோராய் விளங்கியிருந்த காலம். அறத்தைக் காக்கின்ற சிறப்பும், பகைவர்களை அழிக்கின்ற திறமையும், தாம் வென்ற நாடுகளைப் பாதுகாக்கின்ற ஆற்றலும் உடையோராய் அவர்கள் விளங்கினர். எல்லாருடைய தலைநகரங்களும் சிறந்தோங்கி இருந்தன. நகர்களிலும், கிராமங்களிலும் திருவிழாக்கள் இடையருது நிகழ்ந்து கொண்டிருந்தன. மக்கள் கெடாத இன்பத்துடன் வாழ்ந்து வந்தனர். பயிர்கள் செழித்துப் பலன் தந்தன. காவிரியும், வையையும் பேரியாறும் வளம் சுரந்து ஊட்டின. பொய்யா வானம் புதுப் புனல் பொழிந்தது. நாட்டில் அங்கங்கே பல அரங்குகளும், ஆடல் பாடல் கழகங்களும் இருந்தன.

‘ தூக்கும் வரியும்
பரந்துஇசை எய்திய பாரதி விருத்தியும்,
திணைநிலை வரியும், இணைநிலை வரியும்,
அணைவுறக் கிடந்த யாழின் தொகுதியும்,
ஈரேழ் சகோடமும், இடநிலைப் பாலையும்,
தாரகத் தாக்கமும், தான்தெரி பண்ணும்,
ஊரகத் தேரும், ஒளியுடைப் பாணியும் ’

ஆகிய கலைகள் பலவற்றைப் பயின்று மக்கள் இனிய வாழ்க்கை நடத்தி வந்தனர். அரசர்கள் கலைவாணர்களுக்குப் பொன்னும், பொருளும், தலைக்கோல் முதலிய பட்டங்களும் அளித்து அவர்களைப் பாராட்டி வந்தனர்.

புகார், மதுரை, வஞ்சி ஆகிய பெரிய நகரங்களின் செல்வச் செருக்கு வானத்துச் சக்திகளுக்கும் பொறுக்க முடியாததாக இருந்தது. பின்னர்ச் சில நாட்களில் புகாரை நீர் கொண்டது,

மதுரையை நெருப்பு உண்டது, வஞ்சி மங்கியது என்று அறிகின்றோம். நகர்களில் மட்டுமன்றி, ஆயரும், எயினரும் வேடரும் வாழ்கின்ற சேரிகள் சிற்றூர்களிலும் மக்கள் செல்வம் படைத்து, விருந்து ஓம்பி, ஆடவரும் பெண்டிரும் ஆடிப் பாடிக் களிப்புடன் வாழ்ந்து வந்தனர்.

இங்ஙனம் திருமகளும் கலைமகளும் கலந்துறவாடிய நாட்டிலே, மக்கள் தம் உயிருக்கு உறுதி பயக்கும் நல்லொழுக்கங்களைத் தளரவிட்டுச் சுகபோகத்தில் மூழ்கிவிடுதல் வியப்பன்று. கோவலன் அக்காலத்துச் செல்வர்களில் ஒருவன். அவனுடைய வாழ்க்கை அச்செல்வர்களின் வாழ்க்கைக்கு ஓர் எடுத்துக்காட்டு. ஊரிலே விழா நடக்கிறது, இருபத்தெட்டு நாட்களாக நடக்கும் பெரு விழா அது. கோவலனுக்குத் தன் மனைவியல்லாத மற்றொரு மங்கையினுடைய நட்பும் இருக்கின்றது. அவள் நல்ல அழகி. இயற்கை அழகோடு செயற்கை அழகும் செய்துகொள்ளத் தெரிந்தவள். ஆடல் பாடல் கலைகளிலும் ஒப்பற்றவள். காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள நீராடு தடங்களிலும், விளையாடு சோலைகளிலும், தேரோடு தெருக்களிலும், நாளங்காடி அல்லங்காடிகளிலும் அவளோடு சேர்ந்து அலைந்து கொண்டிருக்கிறான் கோவலன். முல்லை மல்லிகை மயிலை குவளை செங்கழுநீர் முதலிய பல வகைப் பூக்களால் தொடுக்கப்பெற்ற மாலைகள் அவன் கழுத்தில் துயல் வருகின்றன. அடிக்கடி புதிது புதிதாக அவன் பூசிக்கொண்ட சந்தனம் முதலிய கலவைகளால் அவனுடைய தோள்கள் புலர்வதே இல்லை. நகரத்திலுள்ள பரத்தர் சிலர் அவனுக்குத் தோழர்களாக அவனோடு வந்து

கொண்டிருக்கின்றார்கள். இப்படிப் பட்டவர்களுடைய கூட்டுறவினால் பிழைக்கின்ற பாணர் சிலரும் அவர்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றனர். இவ்வளவு பேருக்கும் என்ன வேலை? நினைத்த நினைத்த இடமெல்லாம் செல்லும் தென்றலைப் போல, கவலையோ கரிசனையோ இல்லாமல் சுற்றிக்கொண்டிருப்பது, அவ்வளவு தான்.

பெரிய குடும்பத்துப் பிள்ளைகளுடைய போக்கு அக்காலத்தில் அவ்வாறு இருந்தது. அவர்களுக்கு நல்ல கல்விப் பயிற்சி உண்டு, இரசிகத்தன்மை உண்டு. ஆனால், அவற்றையெல்லாம் சுகபோக மான வாழ்வுக்குப் பலியிட்டார்கள். இவர்களுடைய நட்பை விரும்பி விலைமாதர்கள் தம் பெண் குழந்தைகளுக்கு தகுந்த ஆசிரியர்களை வைத்து ஆடலும் பாடலும் கற்பித்து, தம் வணிக முதலைப் பெருக்கிக்கொண்டார்கள். ஒரு நாளுக்கு ஆயிரத் தெட்டுப் பொன் பரிசமாகப் பெறும் கணிகையரும் மதுரை முதலிய பெரிய நகர்களில் இருந் தனர். **மணிமேகலைக்கு** மாதவி ஆடல் பாடல் கற்பிக்கவில்லை என்று குறைப்பட்டு, **சித்திராபதி**

> ‘ தலைக்கோ லாசான் பின்னுள னாகக்
> குலத் தலைமாக்கள் கொள்கையிற் கொள்ளார்
> யாது நின் கருத்து என் செய்கோ ’

என்று கதறியழுவதைப் பார்க்கிறோம்.

கண்டவர்களுடைய மனதைக் கவரும்படி யாகத் தம்மை அலங்கரித்துக் கொண்டு, விலை மாதர்கள் தெருக் கூட்டங்களுக்கும் கூசாமல் வந்து விடுவார்கள். நாட்டிலே சன்மார்க்கம் அவ்வளவு தாழ்ந்து கிடந்தது! இவர்களை எதிர்

பார்த்து நகரத்து இளைஞர்கள் (அந்தக் காலத்திலும் பட்டிக்காட்டிலுள்ள இளைஞர்கள் நல்லவர்களாக இருந்திருக்கின்றார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய காரியம்.) அங்கே வருவார்கள். அவனவன் தான்தான் விரும்பியவளுடன் கூடிக்கொண்டு, தன்தன் மனம் போல அவளைப் புகழ்ந்துகொண்டு அவள் பின்னே திரிவான். 'தென்றல் உலவும் இத்தெருவுக்கு வானத்துத் திங்கள் ஏன் வந்தது?

'கருமுகில் சுமந்து குறுமுயல் ஒழித்துஆங்கு
இருகருங் கயலோடு இடைக்குமிழ் எழுதி
அங்கண் வானத்து அரவுப்பகை அஞ்சி'

இந்நிலவுலகுக்கு இறங்கி வந்த திங்கள்தான் உன் திருமுகம்'—என்று ஒருவன் ஒருத்தியைப் புகழ்வான். மற்றொருவன், 'குளிர்ந்த சந்திர மண்டலத்தில் அமுதமாகிய தண்ணீர் பாய்ச்சி, அநங்கன் வளர்த்த வானத்து வல்லிக்கொடி வழிதப்பி வந்து என் கையிலே சிக்கிக்கொண்டது. உனது அழகும் நடையும் குழைவும்—என் பாக்கியம்' என்பான் மற்றொருத்தியை. இன்னும் இப்படிப் பல.

இங்ஙனம் நாடெங்கும் மன்மதன் ஆட்சி நடைபெற்றது. அவனுடைய மகரக் கொடி மூவேந்தர்களுடைய வில், புலி, கயல் ஆகிய கொடிகளுக்கு மேலாகப் பறந்தது.

'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு
மாடமதுரையும் பீடார் உறந்தையும்
கலிகெழுவஞ்சியும் ஒலிபுனற் புகாரும்
அரைசு வீற்றிருந்த உரைசால் சிறப்பின்
மன்னன் மாரன்'

வடக்கே வேங்கடம், தெற்கே குமரி ஆகிய தமிழ்

நாட்டு எல்லைக்குள் மாடமதுரை முதலிய தமிழ் நாட்டுத் தலை நகரங்களில் வீற்றிருந்து தாம் அரசு செய்வதாக எண்ணிக் கொண்டிருந்தார்கள் தமிழரசர் மூவரும். ஆனால் உண்மையில் அங்கே நடைபெற்று வந்தது மன்மதனுடைய ஆட்சிதான், அவர்களுடைய ஆட்சியன்று.

மாலைக் காலங்களில் விலை மாதர்களின் வீடுகள் அமர்க்களப் பட்டன. வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டக் கல்லில் தென்மலைப் பிறந்த சந்தனக்குறடு விரைவாகச் சுழன்றது. கத்தூரி முதலிய நறுமணப் பொருட்களும் கம்மென்று கமழ்ந்தன. மாலைகள் கட்டித் தொங்க விட்டு அணி செய்த கட்டிலில் சுண்ணத்துகள் அளைந்த மலர்ச் சேக்கையில் அவர்கள் தாம் தாம் விரும்பிய கொழுநருடன் களித்துயில் கொண்டனர்.

ஆனால், குலமகளிராகிய மனைவிமார் இவ்வாறு தம் கணவன்மாரைப் பரத்தையர்க்குப் பறி கொடுத்து விட்டு, தாலிக்கொடி தவிர வேறு அணி எதுவும் அணிந்து கொள்ளாமல், குளிப்பதையும் மறந்து, ஊது உலைபோல நெருப்பாகப் பெரு மூச்சு விட்டு,

> ‘ வேனிற் பள்ளி மேவாது கழிந்து
> கூதிர்ப் பள்ளிக் குறுங்கண் அடைத்துத்
> தாழிக் குவளையொடு தண்செய் கழுநீர்
> வீழ்பூஞ் சேக்கை மேவாது கழியத்
> துணைபுணர் அன்னத் தூவியிற் செறித்த
> இணையணை மேம்படத் திருந்துதுயில் பெறுஅது
> கலங்கா வுள்ளங்கலங்கக் கடைசிவந்து
> விலங்கி நிமிர் நெடுங்கண் புலம்புமுத் துறைப்ப.’

அழுது கொண்டு காலத்தைத் தள்ளி வந்தனர். ஊரும் நீரும் சான்ருகத் தாம் மணந்துகொண்ட

தமது உரிமை மனைவியர்களுடைய உள்ளம் இவ்வாறு நோகும்படி ஒழுக்கங் கெட்டலைந்த இம்மைந்தர்களைப் பெற்றோரும் பெரியோரும் திருத்தும் வகையறியாது திகைத்தனர். கருணையற்ற காலதேவன் தமிழ் மக்களுடைய குடும்ப வாழ்க்கையைக் குலைத்து, அச் சமூகத்தை அழிக்கச் சதி செய்து கொண்டிருந்தான். இளங்கோ அவனுக்கெதிராகப் போர் தொடுத்தார். கண்ணகி அவருடைய வச்சிரப் படைக்கலமாகப் பிறந்தாள்.

மணிமேகலையின் பிறப்பால் கோவலனும் மாதவியும் ' கணவனும் மனைவியும் ' ஆகி விடுகின்றனர். ஆனாலும், வசந்தமாலையிடம் கடிதம் கொடுத்து அனுப்பிய மாதவிக்குத் தன் கணவனை அவன் வீட்டில் போய்ப் பார்க்க உரிமையில்லை. கோவலன் தன் மகளுக்குத் தன் குலதெய்வத்தின் பெயரை இட்டிருந்தான். எனினும், அந்த மகள் கோவலன் மாதவியை விட்டுப் பிரிந்து சென்ற பின், அல்லது அவன் அவளோடு வாழும் காலத்தில், ஒரு நாளேனும் தன் தந்தையின் வீட்டுக்குப் போனதில்லை, போகும் உரிமையை இளங்கோ அவளுக்குக் கொடுக்கவில்லை. ஏனென்றால், கணிகையர் குலத்து மாதவி வயிற்றிற் பிறந்த அவள் கோவலனுடைய மகள் அல்லள்.

ஆனால், கண்ணகிக்கு மட்டும் ஒரு மகள் பிறந்து, அவள் ஊமையோ, குருடோ, முடமோ வாக இருப்பினும் அவள் கோவலன் மகள் தான், மாசாத்துவானுடைய பேரப்பெண் தான். கோவலன் இறந்தபின் கண்ணகியும் ஒருவேளை உயிர் நீத்திருக்கமாட்டாள். மாசாத்துவான் தன் பெருஞ் செல்வத்தைப் பிறருக்குத் தானமாக

வழங்கிவிட்டுத் துறவியாகி யிருக்கமாட்டான். மணிமேகலையைப் பற்றியோ மாதவிக்கும் அவள் தாய் சித்திராபதிக்கும் தவிர, வேறு யாருக்கு என்ன கவலை?

தனக்கு ஒரு சொந்தக் குழந்தை இல்லாக் குறையால் கண்ணகி தன் கணவனுக்குப் பிறந்த மகள் மணிமேகலையைப் பார்க்க விரும்பி இருக்க லாம், தவித்தும் இருக்கலாம். சட்டத்தை மதிக்கும் கண்டிப்பான மனிதராகிய இளங்கோ தமக்குள்ள சீர்திருத்த வேட்கையில் கண்ணகியின் விருப் பத்தைத் தடுத்து விடுகிறுர். மணிமேகலைகள் வந்து குடும்பத்தில் ஏற இடங்கொடுத்து விட்டால், புனிதமான குடும்ப வாழ்க்கையின் கதி என்னவா கிறது? கணிகையர் குலத்திலே சித்திராபதி என்னும் சிப்பியின் வயிற்றிற் பிறந்த முத்து மாதவி. அவள் வயிற்றிற் பிறந்த ஆணிமுத்து மணிமேகலை. ஆயினும் நாகரிகமுள்ளதொரு சமூகத்தின் குடும்ப வாழ்க்கையில் பின்வாயில் வழியாக வந்து அவர்கள் இடம்பெற முடியாது. அவர்கள் குடும்ப வாழ்க்கையைப் பாழாக்கும் நச்சு வேர்கள். அவர்களை முண்டிதம் செய்து, காவியுடுத்தி, அவர்கள் கையில் அட்சய பாத்திரங் களைக் கொடுத்துப் புண்ணியமாக வாழ விடுதலே தகுதி.

சமூகத்தில் அவர்கள் சேர வேண்டுமாளுல் குடும்பப் பெண்களாக வேண்டும். அவர்களைக் குடும்பப் பெண்களாக வரிப்பதற்குச் சில வீர இளைஞர்கள் முன் வரவேண்டும். அப்படியும் வந் தான் ஒருவன், உதய குமாரன். அவன் மணி மேகலையை மணந்துகொள்ள விரும்பினுன். சாத்

தனர் அதற்கு இடமளிக்கவில்லை. இந்தப் பிரச்சினை இன்னும் நமது நாட்டில் தீராத பிரச்சினையாகவே இருக்கின்றது. நமது தீயொழுக்கத்தால் நாம் படைத்து விட்ட மாதவி மணிமேகலை என்னும் மாதர்மணிகளுக்கு நமது சமூகத்தில் என்றுமே உய்வு இல்லையா ?

மக்களை அழிவுத் துறைக்கு இழுத்துச் சென்ற செல்வமும் கலையுமாகிய இவ்விரண்டன் ஆரவாரங்களுக்கிடையே, அவர்களை அழியாமல் காப்பதற்குரிய வல்லமை படைத்த ஆற்றல் ஒன்றும் அக்காலத்தில் அமைதியுடன் உயிர் வாழ்ந்துதான் வந்தது. அந்தப் போலி வாழ்வின் பெருங் கூச்சலுக்கிடையே அது மதிப்பற்று இளைத்துக் கிடந்தது. கண்ணகி போன்ற உத்தமமான மனைவியர் கையிலே உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருந்த இல்லற வாழ்க்கைதான், கேட்டை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்த தமிழ்ச் சமூகத்தைக் காக்க வல்ல அந்த வாடிய சஞ்சீவிப் பயிர். நவநாகரிக மோகத்தால் ஆடவன் அதனைக் கைநெகிழ்ந்து சென்றான். பெண் தனியே நின்று அதனைக் காத்தாள். ஆடவன் அறத்தைக் காக்க முன்வந்தால் அவனுக்கு ஆயிரம் பேர் துணை வேண்டும். கோதண்டம் என்ற வில்லுடன், மாருதி முதலிய எண்ணற்ற மதி மந்திரிகளும் வீரத் தந்திரிகளும் இராமனுக்குத் துணையாக இருந்தனர் அவனுடைய தாய் நாட்டிலே. ஆனால் அபலைப் பெண் சீதை, அந்நியர் நகரிலே, சிறைக் கூடத்திலே, அச்சுறுத்தும் அரக்கியர் நடுவிலே, கூற்றுவனும் நடுங்கிப் பதுங்கும் இராவணன் முன்னே தனித்து இருந்து அறத்தைக் காத்தாள்.

இளங்கோவினது கவிதா மேதை என்னும் கவின்மிகு தடத்திலே மலர்ந்த கற்பனை மலர் அல்லள் பெண். அழிவை நோக்கிப் போகும் அறிவற்ற சமூகத்தைத் தன் பண்பால் ஈர்த்து அறத்தில் ஊன்றிக் காக்கும் தகுதியுடைமையால் பெண் தெய்வமாகின்றாள். செல்வச் செருக்காலும் கலை வெறியாலும் அழிந்து வரும் ஒரு சமூகத்தைச் செப்பம் செய்து வளர்க்கும் திருப்பணியில் அறிஞர் பெருமானாகிய இளங்கோவுக்குத் துணை நிற்பவள் நம் கண்ணகித் தாய். ஆகவேதான், மூன்று காண்டங்களாக மலர்ந்துள்ள கதையிலே முக்கிய கதா பாத்திரங்களாக வரும் மூவரிலே, மாதவி தன் ஆடல் பாடல்களை முடித்துக் கொண்டு முதற் காதையோடு தங்கி விடுகிறாள். கலைக்கு ஆக்கம் தந்த காரிகை மாதவி அறத்துக்குப் பெருமையளிக்கவில்லை என்ற மனக்குறை நமக்கு அவள்பால் உண்டு. ஒழுக்கம் இழந்து வேரற்ற கோவலனது வாழ்க்கை, கண்ணகியின் அன்பால் இரண்டாம் காண்டம் வரை நீண்டு அதன்பின் முடிகிறது. ஒழுக்கம் துறப்போர் வாழார் என்பது தமிழர் கண்ட உண்மை. சமணர்கள் அவர்களுக்குப் போதிக்க வேண்டா !

ஒருபுறம் சுகபோகம், மற்றொருபுறம் துறவுபதேசம். இவ்விரண்டின் இடையேயும் அகப்பட்டுத் தமிழ்ச்சமூகம் தத்தளிக்கின்றது. விதிவிலக்குகளைப் பற்றித் தீர்ப்பு அளிப்பதுமட்டும் ஒரு சமூகத்திற்குச் செய்யும் உதவியாக மாட்டாது. அதற்கு நல்வழியும் காட்டல்வேண்டும். அந்தச் சமூகத்தின் பரம்பரையில் ஊறிய அறத்தின் அடிப்படையில் அதற்கு வழிகாட்டல் வேண்டும். இளங்

கோவுக்கு இதனை யாரும் எடுத்துரைக்கவேண்டா. நெறிநின்றெழுகும் இல்வாழ்க்கையில் எய்தும் இன்பமே தமிழர்க்கு வேண்டுவது, அவ்வின்பத்துக்கு நிலையம் அன்புருவாகிய பெண்ணே என்று காட்ட விழைந்தார் அவர். நெறிநின்ற கண்ணகிக் கன்மலையைக் கலைமோதியது, சுவைமோதியது, கோவலன் அதன் வேரையே பறிக்கப்பார்த்தான். அது துளங்கவில்லை. அறமே அசைந்தாலும் அழிந்தாலும், தான் அசையாது அழியாது நின்று, பின் அவ்வறத்தை உயிர்ப்பிப்பவள் பெண்ணே. பெண்ணின் அறப்பற்றே ஒரு சமூகத்தின் அரண், ஆருயிர். ஆதலினால்தான் அடிகள் அவளை, வீரனாகிய சேயோனை வழிபட்டு வீரவணக்கத்துக்கு எளிதில் இசையும் பண்புடைய மலைநாட்டுக்கு அழைத்துச் சென்று, அங்கே அவளைக் கடவுளாக்குகிறார். வஞ்சிக் காண்டம் சிலம்புக்கு வேண்டுவதன்று என்பார் கூற்றும், அது இளங்கோ பாடியதாகாது என்பார் கூற்றும் பொருந்துமா?

## III

பன்னிரண்டு ஆண்டும் நிரம்பப் பெறாத சின்னஞ் சிறு பெண் கண்ணகி அறம் காக்கும் அரங்குக்கு வருகிறாள். உலகத்திலே உயர்ந்த பணிகளில் ஈடுபடும் யாருக்கும் சுகம் கிடையாது, தொல்லைகள் பல நேரும். கடவுள் அவர்களுக்குத் தோன்றாத் துணையாய் இருந்து ஆற்றலும் வெற்றியும் அளிக்கின்றான்; ஆனால் அவர்களிடம் அவன் கருணை காட்டுவதில்லை. கணவன் போன்ற அணுக்கச் சுற்றத்தாரும் அவர்களுக்குத் துன்பம் விளைப்பார்

கள், துரோகம் செய்வார்கள். நீதியை நடத்தும் அரசாங்கமும், விதியும் அவர்களுக்குச் சதிசெய்யும். எத்துணை இடர்கள் வரினும், அவர்கள் தாமே தமக்குத் துணையாக இருக்கிருர்கள். சாவுக்கு அஞ்சாப் போர்வீரன் வாழ்வே அவர்கள் வாழ்வு. அறத்தில் அவர்களுக்கிருக்கும் அளவாப் பற்றும் அசையாத நம்பிக்கையுமே அவர்களுக்கு ஆற்றல் அளிக்கும் மூவா நிலையங்கள். அவர்கள் எதிரே குறுக்கிடுபவர் வேந்தர்களாயினும் அன்னுர் அவர்களுக்குத் துரும்பு அளவே. அவர்கள் விதியையும் சீறுவர். இயற்கையாற்றல்களும் அவர்களுக்கு அடங்கிப் பணியும்.

சிறு பெண் கண்ணகிக்கு அடிகள் இத்தகைய கடிதான வாழ்க்கையைத்தான் விதிக்கிருர். கண்ணகியின் தாய், அவள் இறந்த பின்னர் அவளுக்காக அழுது புலம்பும்போது,

> ‘ யான்பெறு மகளே, என்துணைத் தோழீ
> வான்துயர் நீக்கும் மாதே வாராய் ’

என்று கூறுகின்ருள். ‘என் துயர்தீரப் பிறந்த மகளே, எனக்குத் தோழியாக இருந்த மகளே’ என்பதனுல், நெடுங்காலம் அவள் பிள்ளைப்பேறு இல்லாமல் அடைந்த மிகுந்த துயரத்தைக் கண்ணகி பிறந்து தீர்த்தாள் என்றுகொள்ள இடமிருக்கின்றது. மேலும், இக்கண்ணகி வேறுபிள்ளைகள் இல்லாத தன் தாய்க்குத் தோழிபோன்று உடனிருந்திருக்கிருள் என்றும் தெரிகிறது. பெற்ருேர் செய்த பெருந்தவத்தால் பிறந்த ஒரே மகளை இளங்கோ தமிழ்நாட்டின் தவப்பெண்ணுகத் தாம் சுவிகாரம் செய்துகொள்கிருர்.

'தென்தமிழ்ப் பாவை, செய்தவக் கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய
திருமா மணி'

அவள். செல்லமாகத் தம் பெற்ருேருடைய வீட்டில் வளரும் எத்தனேயோ சிறு பெண்கள், மணமான பிறகு எதிர்பாரத இன்னல்களுக்குள்ளாகித் தவிப்பதையே தமிழ் நாட்டில் பார்க்கின்ருேம். அவர்களில் ஒருத்தியே நம் கண்ணகி.

மணமாகிச் சில ஆண்டுகளுக்குள்ளே அவளுடைய இன்ப வாழ்க்கை முடிந்து போராட்டம் தொடங்குகிறது. அக்காலத்தில் பரவியிருந்து சமூகத்தைப் பாழாக்கிவந்த நஞ்சு அவள் வாழ்க்கையையும் தீண்டியது. அவள் கணவன் எளியோர்க்கு இரங்குபவன், தன் வாழ்க்கையில் இருமுறை மற்றவர்கள் உயிரைக் காப்பதன் பொருட்டுத் தன் உயிரைப் பணயமாக வைத்த வீரத்தியாகி. படித்தவன். இவ்வளவு நல்ல பண்புகளும் உடைய அவனிடம் ஒரு தீய இயல்பும் இருந்தது. மதயானேயை அடக்குவான் அவன், ஆனல் மாதர்கள்மீது ஓடும் தன் மனத்தை அடக்கும் உரம் அவனுக்கு இல்லே. இந்த பலக்குறைவு அவன்பால் தோன்றி வளர்வதற்கு அவன் மட்டும் பொறுப்பாளியல்லன். அவன் வாழ்ந்த சமூகத்தின் 'நாகரிகத்திற்கும்' அதில் பங்கு உண்டு.

பொற்கொல்லனுடைய சூழ்ச்சி, பாண்டியனுடைய நீதியற்ற தீர்ப்பு, ஊழ்வினே இவை காரணமாக அவன் வாழ்க்கை சோகத்தில் முடிந்தது என்பது கதை. ஆனல், அவனிடமிருந்த ஒரே ஒரு பலக்குறைவு, ஒளியை விழுங்கும் இருள் போல, அவனுடைய நற்குணங்களேயெல்லாம்

சிதைத்து, இறுதியில் அவனுடைய ஆயுளையும் குடித்துவிடுகிறது என்று ஏன் சொல்லக்கூடாது?

மனிதன் நற்குணம் தீக்குணம் ஆகிய இரண்டும் கலந்த கலவையாக இருக்கின்றான். அவன் உள்ளம் இவ்விரண்டு குணங்களும் போராடும் ஒரு களமாக இருக்கிறது. புராணங்கள் புகலும் 'தேவாசுரப்போர்' என்பது இதுதான் போலும்! நற்குணம் வென்றால் அவன் வாழ்க்கை புகழுடன் கூடி வெற்றியுடையதாக முடிகின்றது. தீக்குணம் வென்றால் இகழ்ச்சியிலும் தோல்வியிலும் வந்து முடிகின்றது. கோவலன்,

> 'வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு
> குறுமொழிக் கோட்டி நெடுநகைபுக்குப்
> பொச்சாப்புண்டு பொருள் உரையாளர்
> நச்சுக் கொன்று'
>
> 'சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
> குலம்தரு வான்பொருட் குன்றம் தொலைத்து'

தன் அகத்தடங்கிய தீக்குணத்துக்குத் தூபம் காட்டி அதனை வளர்க்கின்றான். அவன்பாலுள்ள நல்ல பண்புகள் அவன் உள்ளத்தே வளர்ந்து வரும் தீய பண்புகளுக்கு இடங்கொடுத்து நலிந்து வாட்டமுறுகின்றன. தானே தனக்குக் கூற்றுவனாக உருப்பெற்று வருவதை அறியாத கோவலன், மாதவியின் அழகும் அன்பும் ஆடலும் பாடலும் தன்னைக் காப்பாற்றும் என்று மருண்டு கிடந்தான். பழவினை ஒருபுறமிருக்க, அவன் அப்பிறப்பிற்செய்த புதுவினையும் முதிர்ந்து அவனை விழுங்குகின்றது.

சாகாமல் தப்புவதற்கு வாழ்க்கையில் கோவலனுக்குச் சந்தர்ப்பங்கள் அளிக்கப்படாமல் இல்லை.

அவன் மனைவி கண்ணகி அவனுக்குக் கிடைத்த முதல் சந்தர்ப்பம், முதன்மையான சந்தர்ப்பமும் ஆவள். தாமரையில் உறையும் இலக்குமிபோன்ற வடிவழகு உடையவள் அவள். வடமீன்போன்று திண்ணிய கற்புடையவள். இவற்றோடு நற்குணங்களைக் காதலிக்கின்ற உயர்ந்த இலட்சியம் உடையவள். உடுத்துதல், அணிதல், மலர் சுண்ணம் முதலிய மணப் பொருட்களால் ஒப்பனை செய்து கொள்ளுதல், இவற்றில் ஆர்வம் கொள்ளாதவள். ஊள்ளீடு இல்லாத குறைகளை மூடுவதற்குத்தானே வெளி அலங்காரம்! எனவே கண்ணகிக்கு எப்போதுமே புறத்தில் சிரத்தை இல்லாதிருந்ததில் வியப்பில்லை.

கண்ணகியின் இயல்பினை அறிந்தவர் கவுந்தியடிகள். அவளை மாதரியிடம் அடைக்கலமாகக் கொடுக்கும்போது அவர் சொல்லுகிறார் :

‘ உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகும் அளவும்
இடைக்குல மடந்தைக்கு அடைக்கலம் தந்தேன்.
மங்கல மடந்தையை நன்னீராட்டிச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் தீட்டித்
தேமென் கூந்தல் சின்மலர் பெய்து
தூமடி உடீஇ,’

அவளுக்குத் தாயும், ஆயமும், காவலுமாக நீ இருத்தல் வேண்டும்.’

மாதரி, கவுந்தியடிகள் சொன்னவாறே, கண்ணகியை நன்னீராட்டி, வெளுத்தமடியால் அவளை உடுத்துவிக்கிறாள். விலைமதிப்புள்ள நகைகளை அணிந்து, செயற்கை அழகுடன் விளங்கும் மதுரை நகரத்துப் பெண்களைப் பார்த்துப் பழகிய மாதரிக்கு கண்ணகியைப் பார்த்தபோது ஒரு

பேருண்மை புலனுகின்றது. அந்த விந்தையை அவளால் அடக்கிக் கொள்ளவும் முடியவில்லை, வாய்விட்டுச் சொல்லிவிடுகிருள் கண்ணகியிடம். 'அம்மா, கண்ணகி! உனக்கு நல்ல அறுவை இல்லை, நகைகள் இல்லை, மலரும் சுண்ணப்பூச்சும் இல்லை. இயற்கையான 'செய்யாக் கோலத்துடன்' நீ இருக்கின்ருய். ஆயினும் இந்த மதுரைமாநகரில் விலைமதிப்புள்ள நகைகளை அணிந்துகொண்டிருக்கும் எவளும் உன் அழகின் முன்நிற்க முடியாது. உன் அழகு ஒப்பற்றது.'

கண்ணகியின் உள்ஒளி அவள் மதிமுகத்திலும், மலர்க்கண்களிலும், மாந்தளிர் மேனியிலும் வில்லிட்டுப் பிரகாசித்தது. படிப்பும் பயிற்சியும் இல்லாத மாதரி என்னும் பாமரப்பெண் அந்த ஆன்ம ஒளியினைக் கண்டாள். கவுந்தியடிகள் என்னும் மூதறிஞரும் கண்டார். கோவலன் அதனைக் காணக் கண் இல்லாத குருடனுக இருந்தான். முகத்தில் முறுவல் தோன்றக் கண்ணகியின் ஆன்மா சிரிக்கும் அழகிய சிரிப்பைக்கண்டு இன்புறும் பாக்கியம் இல்லாத பாவி அவன், என்று இளங்கோ கோவலனுக்காக இரங்குகிருர். யார் தான் அந்தப் பேதைக்காக இரங்காமலிருக்க முடியும்?

இங்ஙனம், சீர்கெட்ட ஒரு சமூகமும், மதியற்ற பேதைக்கணவனும்—ஆகிய இவ்விரண்டு ஏதுக்களையும் வைத்துக் கொண்டு, கண்ணகி தன் வாழ்க்கையைத் தொடங்குகிருள். எவ்வளவு அநுகூலமான ஏதுக்கள் இவை! பெண்மீது இளங்கோவுக்கு இருந்த எல்லையற்ற நம்பிக்கையைக் காட்டுகிறது இது. கரியை மஞ்சளாக்குவாள் பெண்,

பாவத்தைப் புண்ணியமாக்குவாள், பழியில் முடியும் துயரவாழ்வைப் புகழாக விடியும் அமர வாழ்வாக மாற்றுவாள் அவள்.

சாதிக்கும் திறமுடையவர்களுக்குத் தான் சோதனை வருகிறது. கோவலன் கண்ணகியைக் கைவிட்டுப் பிரிந்து சென்ற அன்று மாலை, வழக்கமாக எந்நாளும் வரும் மாலைக்காலத்து இருள்தான் அன்றும் வந்து காவிரிப்பூம்பட்டினத்திலும் இவ்வுலகிலும் பரவியது. ஆனாலும் அன்று முன் எப்போதும் இல்லா வண்ணம் அவ்விருளில் ஒரு துயரமும் கலந்து அவளை அச்சுறுத்தியது. தன் கணவனாகிய சூரியனை இழந்துவிட்டு, ஆதரவுக்காகத் தன் சேயாகிய சந்திரனைத் தேடித் தேம்பும் நிலமகளின் சோகம்போல, காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள வணிகர் தெருவிலே, ஏழு அடுக்கு மாளிகை ஒன்றிலுள்ளதொரு சிற்றறையிலே, அம்பு ஏறிய மயில் போலத் தனியே கிடந்து துடிதுடிக்கும் ஓர் இளம் பெண்ணின் உள்ளத்தில் எழுந்த சோகம் வானிலையிலும் சென்று பரவியது. எண்டிசைகளும் அச்சோகத்தால் எதிரொலித்தன. மண்ணும் விண்ணும் சூனியமாகப் போயின. கண்ணகி நடுக்கத்தால் வெட வெடத்தாள்.

புகார் நகர்வாசிகளுக்குக் கோவலன் மாதவியை அடைந்தது பலநாள் வம்புப் பேச்சுக்கு உதவக் கூடிய ஒரு பரபரப்பான செய்தியாக இருந்திருக்கலாம். ஆனால் அதன் பொருட்டு நில மகளது கண்களாகிய மலர்களிலிருந்து கண்ணீர் வார்ந்தது, கண்ணகியின் கண்ணீருக்குப் பின்னணி போன்று. கோவலன் கொலையுண்டபோது அரசன் செய்தது பெரிய அநீதி என்று உணர்ந்து, முதன்

முதல் 'மண்ணக மடந்தையே வான்துயர்' கூர்ந் தாள் என்று அறிகின்றோம். மனிதர் ஒழுக்கம் தவறும்போது இயற்கை வருந்துகின்றது. இளங் கோவைப் போன்ற ஞானிகள் அப்படிக் கருதுகின் றார்கள்.

வாழ்க்கையில் எல்லா மனிதர்க்கும் ஏமாற்ற மும் தோல்வியும் நேர்கின்றன. கண்ணகிக்கு வந்த எதிர்பாராத பெரிய ஏமாற்றம் இது. தன் கணவன் மற்றொருத்தியின் பொருளாவதைப் பார்ப்பதைக் காட்டிலும் அவள் சாகச் சம்மதித்திருப்பாள். பெண்ணாகப் பிறந்தவளுக்கு அவ்வளவு கொடிய துன்பம் அது. ஆடவனுக்கும் தன் கண்ணெதிரே தன் மனைவியை மற்றொருவன்பால் இழப்பது தாங்கொண்ணாத் துன்பம் தருவது. சாதாரண மக்கள் தமக்கு வரும் துன்பத்தை வென்று மேலேறும் வகை அறியாது அதற்குப் பலியாகின் றனர். கண்ணகியோ அதிர்ச்சி தெளிந்து எழுந் தாள். அதாவது, கண்ணகியின் உள்ளிருந்த கண்ணகி எழுந்தாள். வாழ்க்கையில் எதுவரினும் அதனை எதிர்த்து வெல்லும் ஆற்றலுடன் நிமிர்ந் தாள். அவள் பெண்மை தலைதூக்கியது.

கம்பருடைய காவியத்தலைவன் மணிமுடியை எதிர்பார்த்துக் கொண்டு படுக்கைக்குச் சென்றான். காலையில் அவனுக்குச் சடைமுடி கிடைக்கின்றது. அரசன் அரைக்கணத்தில் ஆண்டியாகிறான். அப் போது அவன் தாய்,

'வஞ்சமோ மகனே உனைமாநிலம்
தஞ்சமோ நீதாங் கென்ற வாசகம்?
நஞ்சமோ? இனிநான் உயிர் வாழ்வெனோ?
அஞ்சும் அஞ்சும் என் ஆருயிர் அஞ்சுமால்?'

என்று அழுது புலம்புகிறாள். தம்பி இலக்குவன்,

'மெய்யைச் சிதைவித்துநின் மெய்ம்முறை நீத்த நெஞ்சம்
மையிற் கரியாள் எதிர்நின்னை நன்மௌலி சூட்டல்
செய்யக் கருதித்தடை செய்குவர் தேவரேனும்
துய்யைச் சுடுவெங்கனலிற் சுடுவான் துணிந்தேன்'

என்று சீறுகிருன்.

தனக்கு வந்த பெரிய ஏமாற்றத்தைத் தான் சகித்துக் கொள்ள வேண்டியதுடன், சோகத்தால் சோரும் அன்னையையும், கோபத்தால் கொதிக்கும் தம்பியையும் ஆற்ற வேண்டிய பொறுப்பும் இராம னுக்கு நேர்கின்றது. இப்படிப்பட்ட அன்புடைய ஒரு வீரத் தம்பியையும், அயோத்தி மக்களுடைய ஆதரவையும், தன் வில் வலியையும் வைத்துக் கொண்டு இராமன் ஒரு பெரிய புரட்சி செய்திருக்க லாம். மனிதனுடைய ஆன்ம ஏற்றத்துக்கு; வெற்றியைக் காட்டிலும் தோல்வியும், வாழ்வைக் காட்டிலும் தாழ்வும் உதவுகின்றன என்ற உண் மையை உணர்ந்தவன் அவன். கைகேயி சூழ் வினையால் தனக்கு நேர்ந்த இழப்பின் உருவத்தில் தன்பெருவாழ்வுக்குரிய சந்தர்ப்பம் வந்து தனக்கு வாய்த்துவிட்டதாகக் கண்டுகொள்கிருன். அந்த மகிழ்ச்சியில், முன்பெல்லாம் புத்தம் புதிய தாமரை மலர்போன்று விளங்கும் அவன் முகம் இப்போது அதனை வென்று மிக்க ஒளிபெற்று விளங்கிற்று. தந்தையின் சொற்படி நடக்கவேண்டுமென்ற கடமைக்காக மட்டும் அவன் வனஞ்செல்லவில்லை. தன் உயர்வைக் கருதிய 'தன்னலத்'தோடும் சென்ருன்! எல்லாரும் அவனுக்காக இரங்கினர். அவன் தந்தை தசரதன் வருத்தத்தால் இறந்தே போய்விட்டான். அவனோ தனக்கு வாழக் கிடைத்த சந்தர்ப்பத்தை எண்ணி மகிழ்ந்தான். அன்னை யிடம்,

'சித்தம் நீதிகைக் கின்றதென், தேவரும்
ஒத்த மாதவம் செய்துயர்ந்தா ரன்றே !
எத்தனைக்குள ஆண்டுகள் ? ஈண்டு அவை
பத்தும் நாலும் பகல் அலவே ? என்ருன்,

தம்பியிடம்,

' நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை, அற்றே
பதியின் பிழையன்று, பயந்து நமைப்புரந்தாள்
மதியின் பிழையன்று, மகன்பிழையன்று, மைந்த !
விதியின் பிழை, நீ இதற்கு என்னை வெகுண்டது என்ருன்'

'நமது தந்தையோ, தாய் கைகேயியோ, தம்பி பரதனே யாரும் நமக்குத் தீங்கு செய்யவில்லை. விதி செய்த பிழை என்று வேண்டுமானுல் சொல்லலாம். கோபப்பட்டுப் பயனில்லை' என்று சொல்லி, இருவரையும் தேற்றிவிட்டு, வனத்துக்கு ஏகுகின்ருன்.

பல ஆண்டுகள் வனவாழ்க்கையில் துன்பங்களை அநுபவித்து உள்ளம் உரத்துப் போனவன் இராமன். அவனும் தன் வாழ்க்கைத் துணைவியை இழந்தபோது தாங்கொண்ணுது துடிக்கின்ருன். ஆனல் பேரிடியைத் தாங்குவதற்குரிய முன்பயிற்சி எதுவுமின்றி நம் கண்ணகி ஒருநாள் திடீரென்று தன் கணவனை இழக்கிருள். இராமகதாசிரியர்கள் இராமனுக்குக் காட்டும் கருணையையும், அவனுக்கு அளிக்கும் பயிற்சியையும் கண்ணகி இளங்கோவிடம் பெறவில்லை. தொடக்கத்திலேயே கடுஞ் சோதனைக்குள்ளாகிருள் அவள். ஆயினும் துன்பத்தைப் பொறுமையுடன் சகித்துக்கொண்டு உயிர் வாழும் திறம், உள்ளத்தின் உரம் அவளுக்கு இருந்தது. இராமனைப் போன்றவர்கள் தத்துவம் தெரிந்து வாழ்கிருர்கள். இளங்கோ கண்ட கண்

ணகிமாராகிய தமிழ்ப் பெண்கள் பிறவியிலேயே தம் உள்ளத்தில் அமைந்து கிடக்கும் தத்துவத்தால் வாழ்கிருர்கள். எந்தக் கட்டத்தையும் கடந்து செல்லும் வன்மை அவர்களுக்கு இயல்பிலேயே இருக்கின்றது!

கோவலன் கண்ணகியைப் பிரிந்து சென்ற பின் அவளைப்பற்றி நாம் கேள்விப்படுவன மிகச் சில. எனினும் அவற்ருல் அவளுடைய முழுச் சித்திரம் ஒன்று நமக்குக் கிடைத்துவிடுகிறது.

முதற்படியாக, அவள் தன் அணிகள் எல்லா வற்றையும் களைந்துவிட்டுக் காதுகளில் தோடும் இல்லாமற் மங்கல நாணுடன், கொல்லன் உலையி லுள்ள குருகுபோல நெருப்பாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிருள். காலம் புண்ணை ஆற்றுகிறது. தனக்காக வருத்தப்படும் தன் மாமன் மாமியர் மனம் மகிழும்படி தன் முகத்தில் புன்முறுவலை வரவழைத்துக் கொண்டு, அவர் களுக்குப் பணி செய்து வருகின்ருள்.

‘அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின்
விருந்து எதிர் கோடலும்’

ஆகிய இல்லற நியமங்களை இழந்ததைப்பற்றிய வருத்தம் ஒன்று எப்போதும் அவளை வாட்டிக் கொண்டிருக்கிறது. ஒருவன் தேவர்க்குரிய வேள் வியைத் தன் சகதர்மிணி உடன் இல்லாது செய்யக் கூடாதென்பர் வடநூலார். கணவன் தன்னுடன் இல்லாது விருந்தோம்பும் வேள்வியைச் செய்யாள் தமிழ்ப் பெண். வடக்கே ஆடவர்க்குத் தலைமை, தெற்கே பெண்டிர்க்குப் பெருமை!

கண்ணகி விழா நாட்களில் தன் கணவன் தன்

ளுேடு இல்லாக் குறையை எண்ணிப் பொங்கி வரும் அழுகையை அடக்கிக் கொண்டு பொறுமையுடன் இருக்கின்ருள். தன் அறவாழ்வுக்கு ஊறு செய்த மாதவிமீதும் கோபம் கொள்ளாத அளவுக்கு அவள் மனநிலே நிவந்தோங்கியுள்ளது.

' மடம்படு சாயலாள் மாதவி தன்னேக்
கடம்படாள் காதல் கணவன் கைப்பற்றிக்
குடம்புகாக் கூவல் கொடுங்கானம் போந்த
தடம்பெருங் கண்ணி '

தன்னேப்பற்றிய தீ தன்னேயே எரிக்கட்டும். பிறர் மீது அதன் அனலும் படவேண்டாம். அங்ஙனம் கருதியது கண்ணகிப் பெண் உள்ளம்; அது துரோகம் செய்வாரையும் மன்னிக்கும் தூய குழந்தை உள்ளம். பெண்ணின் பிறவிக் குணம் அது!

அடிக்கடி தோழிமார்கள் வந்து தேற்று கிருர்கள் அவளே. தேவந்தி அத்தோழியருள் ஒருத்தி. 'உன் கணவர் விரைவில் உன்னிடம் வருவார் என்று எனக்கு நம்பிக்கை ஏற்படுகிறது. எனக்குத் தெரியும், உன்மீது அவருக்கு வெறுப்பு இல்லே. நீ முன் பிறப்பில் சரியாக விரதம் காக்காத குறையிஞல்தான் இவ்வாறு தனித்து வாழும்படி நேர்ந்தது உனக்கு. (அவளேத் தேற்றுகிறவர்கள் யாரும் அவளேப்பற்றிக் என்ன வேண்டுமாயினும் குறையாகப் பேசலாம். அவள் கணவனேப்பற்றிக் குறையாகப் பேசக் கூடாது!) என் கணவரும் என்னேவிட்டுப் பிரிந்து போய்விட்டார். வா, நாம் இருவரும் போய், சோம குண்டம் சூரிய குண்டம் என்னும் இரண்டு குளங்களிலும் முழுகி எழுந்து அங்குள்ள மன்மதனே வணங்குவோம்.

அப்படிச் செய்பவர் இம்மையிலும் மறுமையிலும் தம் கணவரைவிட்டுப் பிரியாது அவருடன் வாழும் பேறு பெறுவர்' என்று சொன்னாள் அவள்.

மனிதனுடைய நல்வாழ்வுக்குரிய ஏதுக்கள் புறத்தில் இல்லை, அவனுடைய அகத்திலேயே இருக்கின்றன. அகத்திலுள்ள அவ் வேதுக்கள் தொழிற் பட்டால் புறம் அவற்றுக்குத் தானாகப் பணிந்து பயனளிக்கும் என்பது கண்ணகியின் கருத்து. சோமகுண்டத்தையும் சூரியகுண்டத்தையும் மன்மதனையும் காட்டிலும் அடக்க ஒடுக்கமான நல் ஒழுக்கத்திலும், கணவனே தெய்வம் என்ற கொள்கையிலும், உண்மை வெல்லும், பொய் தோற்கும் என்பதிலும் அவளுக்கு அதிக நம்பிக்கையுண்டு. இருளுக்குப் பின்வரும் இயற்கையான விடிவைப் போன்று, மனிதர் அடையும் துன்பத்துக்கும் இயற்கையான முடிவு உண்டு என்று உறுதியுடனிருக்கும் பெரியோர், சடங்கு வழிபாடுகளின் மூலம் காலத்துக்குமுன் தப்பிச் செல்ல வழி தேடார். காலம் பழுத்து அளிக்கும் விடுதலை பெருமையானதாக இருக்கும். கண்ணகி தனக்கு வந்த துன்பத்தைத் தனக்கே உரியதாக வரித்துக் கொண்டு, அதிலிருந்து தப்பும் மார்க்கங்களைத் தேடுவது 'பீடு அன்று' என்றெண்ணி, அது தானே தீரும் காலத்தைக் கருதிப் பற்றற்ற உள்ளத்துடன் பொறுமையோடு இருந்தாள்.

துன்பம் தீர்ந்து இன்பம் நேரும் நற்காலமும் தனக்கு அண்மையில் இருப்பதாகக் கண்ணகி நம்பவில்லை. இன்னும் கொடிய துன்பங்களை அடைந்த பின்னரே தனக்கு அந்நற்காலம் பிறக்கும் என்று அவள் உள்ளத்தில் ஏதோ ஒன்று

சொல்லியது. கோவலன் மட்டும் மாதவியிட மிருந்து வந்துவிட்டால் அவள் துன்பம் விட்டது என்று எல்லாரும் எண்ணினர்கள், பேசிக் கொண் டார்கள். ஆனல் அவள் மட்டும் தனக்கு வரப் போகும் பெரிய சோதனையை எதிர்பார்த்துக் கொண்டு அதற்குத் தக்க உறுதியுடன் இருந்தாள்.

‘ கடுக்கும் என்நெஞ்சம் கனவினல். என்கை
பிடித்தனன் போயோர் பெரும்பதியுட் பட்டேம்
பட்டபதியிற் படாத தொருவார்த்தை
இட்டனர் ஊரார் இடுதேளிட்டு என்மேல்.
கோவலற் குற்றதோர் தீங்கென் றதுகேட்டுக்
காவலன் முன்னர் யான்கட்டுரைத்தேன் காவலனே
டூர்க்குற்ற தீங்குமொன் றுண்டா லுரையாடேன்
தீக்குற்றம் போலும் செறிதொடீஇ ! தீக்குற்றம்
உற்றேனே டுற்ற உறுவனே டியானுற்ற
நற்றிறம் கேட்கின் நகையாகும் ’

இவ்வாறு கண்ணகி, தான் தன் கணவனுக்கும் தனக்கும் மதுரைக்கும் நேரப் போவதாக எதிர் பார்த்திருந்த சிறுமைகளையும், ஈற்றில் தான் எய்தப்போகும் பெருமையினையும் தன் தோழி தேவந்திக்குமட்டும் சொல்லியிருந்தாள். வேறு யார்க்கும் அவள் எண்ணம் தெரியாது.

வாழ்க்கைப் புயல் சீறும்போது தயக்கமும் தளர்ச்சியுமின்றி நிற்கும் நிலை இது. ‘ என் வாழ்க் கையில் எனது கணவனுடைய அன்பும், குழந் தையினுடைய சிரிப்பும், எது நேரினும் நன்மை யாகவே இருக்குமென்ற நம்பிக்கையும் எனக்கு அமைதியைத் தருகின்றன ’ என்று புத்தர்க்கு ஞானம் தந்த சுஜாதை கூறினள். கண்ணகிக்கு முன்னவை இரண்டும் இல, பின்னதாகிய ஒரு

கொள்கையே அவளைத் தாங்கிச் சென்றது. கல்லூரிகளுக்குச் சென்று, கலைப்பட்டங்கள் பெற்றவள் அல்லள் கண்ணகி. தமிழ் வீடும், வாழ்க்கை மரபும், பரம்பரையும் தமிழ்ப் பெண்களை இவ்வாறு இன்பதுன்பங்களைச் சமநோக்குடன் காணும் தத்துவ நெறியில் நிறுத்தின. வாழ்க்கையின் நன்மைகளும் தீமைகளும் பொருள் பொதிந்தவை என்ற உள்ளத் தெளிவுடன் உயர்ந்தோராக அவர்கள் வாழ்ந்து வருகின்றார்கள்.

## IV

ஒரு நாள் மாலை கோவலன் அவளிடம் வந்து விடுகின்றான். மாதவியை ஒரு நாள் கடற்கரையில் வைத்துப் பிரிந்தவன் சில நாட்களாய்ப் பட்டினத்தில் அங்கங்கே தங்கித் திரிந்துவிட்டுக் கடைசியாகக் கண்ணகியிடம் வருகிறான். 'கானல் வரி' யில் மாதவியை விட்டுப் பிரிந்தவன், 'கனாத்திற முரைத்த காதை'யில் கண்ணகியிடம் வருகிறான். இவ்விரண்டு காதைகளுக்கும் இடையே 'வேனிற் காதை' வருகிறது. மாதவி, 'வேனிற்காலத்தில் மன்மதன் செய்யும் கொடுமைகளை என்னால் பொறுக்க முடியவில்லை. தேவரீர் வந்து என்னைக் காப்பாற்றவேண்டும்' என்று கோவலனுக்குத் தன் மலர்க்கரத்தால் எழுதிய மலர்க் கடிதத்தைத் தன் தோழி வசந்தமாலையிடம் கொடுத்து அனுப்புகிறாள். அவள் கோவலனை ஒரு நாள் கடைத் தெருவிற் கண்டு கடிதத்தை நீட்ட, அவன் 'நாடக மகளின் நடிப்புக்காதலின் திறம் எல்லாம் நான் அறியாதவையல்ல. அவள் நாடகம் இனிப்

போதும்' என்று சொல்லி, அவளை அனுப்பிவிடுகிறான். கைப்பொருளை இழந்து வறுமையுற்றதாலும், காலப் போக்கில் மாதவிமீதுள்ள பிரியம் குறைந்து விட்டதாலும், எல்லாரையும் போல நல்லொழுக்கத்துடன் வாழவேண்டுமென்ற வேட்கையாலும் கோவலன் மாதவியைவிட்டுப் பிரிந்து வந்தான், சட்டென எழுந்த கோபத்தால் மட்டும் அன்று. அவன் மனம் வருந்தியதும் திருந்தியதும் உண்டெனக் காட்டுதற்குத்தான் இவ்வேனிற் காதையை அவ்விருகாதைகட்கு மிடையே பெய்துள்ளார் அடிகள்.

கதை நிகழும் காலம் காரணமின்றி நீள்வது இல்லை. அவனிடம் கைந் நிறையப் பொருள் இருக்கும்போது, தென்றலோடு சேர்ந்துவரும் வண்டினங்களைப் போன்று அவன் பின்னே கூட்டமாகச் சென்று கொண்டிருந்த நண்பர்கள் யாரையும் இப்போது காணவில்லை. அதலபாதலத்தில் வீழ்வதற்கு அவனுக்கு உதவிய அந்நண்பர்கள், இப்போது அங்கிருந்து மேல் ஏறி உய்வதற்கு அவன் ஆன்மா படும் பாட்டில் அவனுக்கு உதவி செய்யாது, அவனைத் தனியே தவிக்கவிட்டுச் சென்றனர். கண்ணகியிடம் செல்வதா, அல்லது எப்பொழுது சென்றாலும் தன்னை எதிர்கொண்டு வரவேற்கச் சித்தம் துடித்துக் கொண்டிருக்கும் மாதவியிடம் செல்வதா? புதிய நன்னெறியா, அன்றிப் பழைய தீநெறியா—இதனைத் தீர்மானிப்பதற்குக் கெட்டழிந்த அப்பாவியின் உள்ளம் உழன்று ஊசலாடியது. வசந்தமாலை மாதவியின் கடிதத்துடன் வந்த வேளை அது. அவன் மனக் களத்தில் நடந்த ஆன்மப் போராட்டத்தில் அவ

னுக்கு எதிராக வந்த புதிய அணுப்படை அவள் அனுப்பிய அக்காதல் கடிதம்.

ஆனால் அவன் இப்போது பழைய கோவலன் அல்லன். நெறிகெட்டு வாழும் இன்பத்திலும், மானமும் நெறியும் பிறழாத துன்பமே சிறந்தது எனத் துணிந்த புதியோன். காம நுகர்வுக்குச் சிறப்பான இளவேனிற் காலமோ, காதல் மாதவி யின் கல்லுருக்கும் கடிதமோ, தன்குல தெய்வத்தின் பெயர் பூண்ட அறிவும் அழகும் வாய்ந்த அருமை ஒருமகள் மணிமேகலையோ, தன் பெற்றோர் முகத் திலும் கண்ணகி முகத்திலும் எங்ஙனம் விழிப்பது என்ற வெட்கமோ, தயக்கமோ, எதுவும் அவ னுடைய ஆன்ம வெற்றிக்குத் தடையாக நிற்க வில்லை. எனவே, அவன் ஏசுநாதருடைய உவமை யில் வரும் கெட்ட மகனைப்போல, நேரே தன் வீட்டை நோக்கி நடக்கின்றான். இத்தகையதொரு சந்தர்ப்பத்தில் நம்மில் யாரும் எப்படி நடந்து கொள்வோமோ அப்படியே கோவலனும் நடந்து கொள்கிறான். வீட்டுக்கு வந்தவன் நேரே கட்டி லண்டை போய் அதில் குப்புறப் படுத்துக்கொண் டான். தான் செய்த தவற்றினுக்காக மனம் வருந்தும் மனிதனைப் போல நோகின்றவர் யார்? அவன் உலகப் பெரிய காவியங்களுக்குத் தலைவ னாகும் தகுதியுடைய மேலோன். பலர்க்கும் உய் வழிகாட்டும் சீரோன். ' லேமிஸரபிள்ஸ் ' எழுதிய விக்டர் ஹியுகோ, ' ஸ்கார்லட் லெட்டர் ' எழுதிய நாதானியல் ஹாதர்ன் போன்ற பேரறிவாளர் களே அவனை நன்கு காணும் தெளிவுடையோர்.

ஏறத்தாழப் பத்தாண்டுகளுக்குமேல் கணி கைத் துயர் வாழ்வில் சின்னபின்னமாகி, ' நோய்ப்

படுக்கையில்' உய்யத்துடிக்கும் கோவலனை இப்போது யார் சென்று தேற்றுவது? அவன் தந்தையா, தாயா? யாருடைய இன்சொற்கள் அவன் புண்ணுன உள்ளத்துக்கு இதம் தரும்! யாருடைய தேறுதல்உரை நம்பிக்கையிழந்து அணையும் விளக்குப்போல் துடிக்கும் அவனை மீண்டும் வாழத் தூண்டும் ஆற்றல் உள்ளது? இந்திரனது வச்சிரத்தால் எறியுண்டு மயங்கி வீழ்ந்த அநுமனைப்போல கோவலன் கிடக்கின்றுன். இக்கட்டத்தில் தென்றலைப்போல மெல்லென வந்து தழுவி அவனை எழுப்பும் அன்பும் ஆதரவும் யாரிடம் எதிர்பார்க்கலாம்? கண்ணகித் தெய்வம் ஒன்றே அந்த அற்புதத்தைச் செய்ய வல்லது! அழியும் அவனுக்கு அழியாத் தன்மை நல்குவது அவள் பெண் அன்புக்கே சாத்தியம்.

கண்ணகி மண்மகள் அறியத் தன் மெல்லடி விரைய, மலரினும் மெல்லிய தன் உள்ளம் அதனினும் விரைய நடந்து, இல்லை, ஓடிவந்தாள் கோவலனிடம். அவன் அவளைப் பார்த்தான். வாழ்விக்க வந்த அத்தெய்வம் அவன்முன் ஆனந்தமாய்ப் பொலிவுடன் நிற்கவில்லை. உள்ளமுடைந்து உருக்குலைந்து ஒளி மழுங்கி உயிர் ஒடுங்கும் உடல்போல் நின்றது. பெரிய பெரிய எண்ண அலைகள் இருவர் உள்ளங்களிலும் மோதியடித்தன. அந்த உணர்ச்சித் தாக்குதலைத் தாங்கும் ஆற்றல் இருவரிடத்திலும் இல்லைத்தான். ஆயினும் கண்ணகியின் அன்பு இருவரையும் தாங்கியது. மெலிந்த உடல், வாடிய உள்ளம், ஆனுல் வற்றுத அன்பு! 'என் வாளால் உலகினை வெல்ல முயன்று தோற்றேன். ஏசுநாதர் தம் அன்பால் உலகினை வென்று இன்றும்

விளங்குகிறார்' என்று கூறினான் வீர நெப்போலியன். கண்ணகியின் பெண்ணன்பு கோவலன் என்னும் சாய்ந்த மரத்தைத் தூக்கி நட்டியது. அருள்புரிய வந்த கடவுள்முன் மனிதனுடைய பயமும் பொய்யும் நில்லாவன்றோ? குழந்தை உள்ளத்துடன் கோவலன் 'எல்லாம் அந்தப் பொய் மகளின் மயக்கம். நமது முன்னோர் தேடிக்குவித்த மலையளவு பெருஞ் செல்வமும் கரைந்துபோயிற்று. நாம் இவ்வாறு வறியர் ஆனோம்' என்று வருந்திக் கூறினான்.

மாதவி செய்த கொடுமை, தான் தவித்த தனிமை ஆகிய இவற்றுள் ஒன்றும் கண்ணகி மனத்தில் எழுவில்லை. "வணிகந்தானே நமது குலத்தொழில். முதலுக்கு என்னிடம் இரண்டு சிலம்புகள் இருக்கின்றன. தயங்காதீர்கள்" என்று சொல்லிக் கோவலனைத் தேற்றினாள். முன் ஒன்றுமே நடவாதது போல முகத்தில் புன்னகை பூக்கப் புகன்றாள் அங்ஙனம். கடுவினை உண்டு விட்டு உயிர்வாழத் தெரிந்தவர் சிவபெருமான் மட்டுமல்லர், கண்ணகியுந்தான். மிகவும் நெருக்கடியான வேளைகளில் இங்ஙனம் தெளிவுடன் தீர்மானம் செய்யும் மனஉரமும் ஆற்றலும் பெண் குலத்தின் தனிக் குணங்கள். இருளைக் கண்டு அஞ்சா நம்பிக்கையுள்ள நல்லுள்ளம் அவர்கள் பெண் உள்ளம்.

தன் அருமைக் கணவன் தன் கண்எதிரே தனக்குச் செய்த துரோகம், செல்வப் பெருங் குடியிற் பிறந்து வறுமை எய்தியது ஆகிய இவை யாவும் அவள் மனத்திரையிலிருந்து மறைந்தன. கடவுளுடைய திட்டத்தில் தீவினை செய்வோர்

துன்பம் அடைவர் என்று சமயங்கள் பல சாற்று கின்றன. ஆனல் பெண்ணின் அன்பு ஆட்சியில் துரோகமே செய்வார்க்கும் அன்பு, மன்னிப்பு, ஆதரவு உண்டு என்று இளங்கோ வகுக்கும் பெண்-சமயம் பேசுகின்றது. கண்ணகியின் அன்பில் கோவலனது தோல்வியுற்ற ஆன்மா வெற்றிகாணும் நம்பிக்கையுறுகின்றது. 'ஆம், கண்ணகி! மானத் தோடு வாழ்வதற்கு, நாம் இழந்தபொருள் அனைத் தையும் ஈட்டுதல் வேண்டும். அதற்கு வேற்றூர் செல்தலே தகுதி. நாளைத்தினம் விடியும் முன் மதுரைக்கு வழிக்கொள்ள வேண்டும். அதற்கு ஆவன செய்' என்று புத்துயிர் பெற்ற கோவலன் கூறினன்.

மாதவிக்குக் கொடுப்பதற்குப் பொருள் இல்லா மையால் வாட்டமுற்ற கோவலனிடம் 'சிலம்பு உள, கொண்ம்' எனக் கண்ணகி கூறியதாக உரையாசிரி யர்கள் எழுதியுள்ளார்கள். கோவலனது சிறுமை யையும் கண்ணகியினுடைய பெருமையையும் எடுத்துக் காட்டுவதற்கு அவ்வுரை உதவலாம். ஆனல், சிலம்பைப்பற்றிய பேச்சு எழும் கனத்திற முரைத்த காதைக்கு முன்னர், வேனிற் காதையில், கோவலனுக்கு மாதவிமீதுள்ள ஆசை அகன்றது என இளங்கோ கூறியுள்ளார். கோவலன் மனம் ஒருவேளை மீண்டும் மாதவியை நாடலாம். 'மாயப் பொய்ம் மகளால் நம் குன்றனைய பெருஞ்செல்வம் தொலைந்ததே' என்று கூறி, அவன் கண்ணகியை வஞ்சிக்கும் கயவனுகவும் இருக்கலாம். ஆனல், இளங்கோ தாம் எடுத்த கதையை மேல் நடத்தும் தெளிவுடையவர். சிலம்பு மாதவி வீட்டுக்குச் செல்வதாயின் கதை புகார்க் காண்டத்தைவிட்டுக்

கிளம்புவது எப்படி? மேலும், கோவலனுக்கும் மாதவிக்குமிடையே இறுதியில் விளைந்த கலாம் காதல்பற்றியதே யன்றிப் பொருள் பற்றியதன்று.

‘ சூழ்வினைச் சிலம்பு காரணமாகச்
சிலப்பதிகாரம் என்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள் ’

இவ்வாறு நூலுக்கு உயிர்க் கருவி சிலம்பே. அதனை மதுரைக்குப் போகவிடுதலே தகுதி. சிலம்பை நம்பித் தானே கோவலனும் கண்ணகியும் மதுரைக்குப் போகிறார்கள்.

V

மதுரைக்குச் செல்லும்முன் கண்ணகி யாரிடமும் ஆலோசனை கேட்கவில்லை, விடைபெற்றுக் கொள்ளவுமில்லை. இத்தனை ஆண்டுகளாக அவளுடைய துன்பத்தில் அவளைத் தேற்றி ஆதரவு செய்துவந்த அவளுடைய அன்னை தந்தையர், மாமன் மாமியர், சுற்றத்தார், தோழிமார் முதலிய எல்லாரைக் காட்டிலும் அவளுடைய ‘கணவன்’ அவளுக்குப் பெரிது. வேற்றூர் செல்ல 'வேண்டுமென்று தன் கணவன் இட்ட திட்டத்தை யாருக்கும் தெரிவிக்காமல், அவனோடுகூட விடியும்முன் ஒளித்துப் போய்விடுகிறாள். கோவலனுடைய உடலும் உள்ளமும் உயிருமே அவளுடைய உடலும் உள்ளமும் உயிரும். எனவே, அவனுடைய நிழலாய் அவள் அவனோடு போனாள்.

வழியிலே எதிர்பாராத வகையில் அவர்களுக்குக் கவுந்தியடிகளுடைய துணை கிடைக்கிறது. வெயிலின் வெம்மையும் நடைவருத்தமும் அவளை வாட்டுகின்றன. தன் கணவனுடைய

தோள்மீது கையைப் போகட்டுக்கொண்டு நடப்பதால் எல்லாத் துயர்களையும் அவளால் சகித்துக் கொள்ள முடிகிறது. ஆனால் தன் கணவன் அடையும் துன்பத்தைச் சகித்துக்கொள்ள அவளால் முடியவில்லை.

> ' கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு
> நடுங்குதுயர் எய்தி நாப்புலர வாடித்
> தன்துயர் காணாத் தகைசால் பூங்கொடி '

வெயிலின் வெம்மையால் கரிகின்றது ஒரு பூங் கொடி. அது தன்வாட்டத்தை எண்ணாமல், பிறர் வாட்டம் கண்டு தான் வாடுகின்றது. ஆணையும் பெண்ணையும் இணைக்கும் இந்தப் பேரன்பைக் கவுந்தியடிகள் அந்தக் காட்டகத்தே கண்டு உள்ளங்குளிர்ந்து தம்துயரத்தைப் பொறுத்துக் கொண்டு அவர்களோடு வழிநடக்கின்றார். நடக் கும்போது ஒரு பிரச்சினை மீண்டும் மீண்டும் அடிகள் மனத்தில் எழுகின்றது. ' கடவுள் என்பது கண்ணுக்கெட்டாமல் வானத்தில் இருப்பதாகச் சொல்கிறார்களே அதுவா, அல்லது, தன்துயரை எண்ணாது தன் கணவனுடைய துயருக்காக வாடித் துடிக்கும் இப் பெண்ணா? தனக்குத் துரோகம் செய்த ஒரு மனிதனை மன்னிப்பது, அவன்மீது வெயில் பட ஆற்றாது அவனுக்காக வருந்துவது! இவளே தெய்வம், இவளுக்காகவே உலகில் மழை பெய்கிறது, இவளுடைய கற்பினாலேயே அரசாங் கங்கள் நிலைபெயராமல் நிற்கின்றன.'

இல்லறநெறியைக் காட்டிலும் உயர்ந்த துறவற நெறியில் நிற்பதாக எண்ணிப் பெருமிதம் கொண் டிருந்த அச்சமணத் துறவிகளின் உள்ளம் கண் ணகியின் அன்புநெறிக்கு முன் சிறுகியது; வியப்

பால் விரிந்தது. கண்ணகி–கோவலன் என்ற அந்த அற்புதக் காட்சியைப் பார்த்துக்கொண்டே கவுந்தி அவர்களோடு சென்றுகொண்டிருந்தாள். மீண்டும் தான் ஒரு பெண்ணுகப் பிறந்தால், கண்ணகியைப் போன்று மணம் செய்துகொண்டு கணவனைப் பேணிவாழும் அன்புவாழ்வு வாழ வேண்டுமென்று அவள் பெண்ணுள்ளம் விரும்பி யிருக்கவேண்டும்! துறவிகளும் மதிப்பது இல் லறம். சாத்தனுருடைய மணிமேகலைக்கு ஆதிரை இட்ட பிச்சையாலேயே அவள் பசிதீர்க்கும் பணி மாட்சியுறுகிறது. துறவுகொண்ட கவுந்திகள், மணிமேகலைகளைக் காட்டிலும் கண்ணகிமார்களே பெண்மையின் எல்லைகண்டு முழுவாழ்வு வாழும் பெரும்பேறு பெற்றவர்களாவர்.

அன்று மதுரையிலே ஆயர்சேரியில் மாதரி வீட்டில் கோவலன்-கண்ணகியினுடைய இல்வாழ்க் கையில் கடைசிநாள். முன்னொருகாலத்திலே வட மதுரை ஆயர்பாடியைப் பொலிவுறச் செய்த ஸ்ரீ கோபாலனையும் நப்பின்னைப் பிராட்டியையும் போன்று, இன்று இத்தென்மதுரை ஆயர்சேரியிலே கோவலனும் கண்ணகியும் வந்திருந்து, அதனைத் தம் தனி அழகாலும் அன்பாலும் விளக்குகின் ருர்கள். அவ்விருவரும் ஒருங்கே அமர்ந்திருக்கக் கண்ட மாதரி, ஒரு நொடிப்பொழுது தன்னை யசோதைப் பிராட்டி என்று எண்ணிப் பூரிப் படைகிருள்; அவள் மகள் ஐயை தன்னை ஒரு கோபிகையாகக் கருதிப் புளகாங்கிதம் அடைகின் ருள். கோவலனும் கண்ணகியும் அத்தகைய தெய்வ ஒளியுடன் இருக்கின்ருர்கள். உலர்ந்து போன தம் வாழ்க்கை மீண்டும் துளிர்க்கும் முதல்

நாள் அது என்று அவர்கள் இருவர் உள்ளத்தும் எழுந்த நம்பிக்கையால் மலர்ந்த ஆன்ம மலர்ச்சியே அதற்குக் காரணம்.

கண்ணகி தன் காவிக் கண்மலர்களும் காந்தட் கை விரல்களும் சிவக்கும்படி ஆர்வத்துடன் தன் கணவனுக்கு உணவு சமைக்கின்றாள். எத்துணை ஆண்டுகளுக்குப் பிறகு அவளுக்கு இந்த இன்ப அநுபவம்! அவள் உள்ளம் பொங்குவதுபோல அடுப்பிலே நெருப்புப் பொங்குகிறது, பானையிலே உலையும் பொங்குகிறது. அவளுக்குத் தன் திரு முகத்தில் துளிக்கும் வியர்வையைத் துடைத்துக் கொள்ளக்கூட நேரம் இல்லை. ஐயை நெருப்பைப் பார்த்துக்கொள்கிறாள். மற்ற எல்லாப் பொறுப்புக் களையும் கண்ணகியே ஏற்றுக்கொண்டு செய்கிறாள். சமையல் முடிந்து, சாப்பாடும் முடிகிறது.

கோவலன் அந்தப் பெண்பாலின் தூய பேரன் பினை எண்ணி எண்ணி வியக்கின்றான். மனத்தில் பாரமே இல்லாமல் ஓடி ஓடிப் பணிசெய்யும் ஊக்கம் அவளுக்கு எங்கிருந்நுவந்தது? அதற்கு என்ன காரணம்? அன்பு செய்யக் கிடைக்கும் வேளைபோல பெண்ணுக்குப் பெருமகிழ்வு தருவது பிறிது இல்லை. அவ்வாறு அவன் உள்ளத்தைக் குளிர்வித்த அன்புக் காட்சி பின்னர்ப் படிப்படியாக அவனை வெதுப்பத் தொடங்கிற்று.

'இந்த நாட்டிலே இப்பொழுது மண்டிக் கிடக்கும் இருளினைப் போக்கும் நந்தாவிளக்கு இவள். இவளே மாதர்களுடைய கற்பு என்று சொல் லப்படும் பூவுலகக் கற்பகத்தருவின் கொழுந்து; அழகு வந்து உறைந்து அழகுபெறும் செல்வக் கோயில். இவளுடைய தெய்விகப் பேரன்பினை

உணராது மயங்கிக்கிடந்த மா பாவி நான். இவளுக்கு மட்டுந்தானு துரோகம் செய்தேன்! என் அருமைப் பெற்ரேருக்கும் துரோகம் செய்தேன். தாயும் தந்தையும் இவ்வருமை மனைவியுமாக இருந்து குடும்ப வாழ்க்கை செய்துகொண்டிருக்கும் பாக்கியத்தை இழந்தேனே. ஊழோ அல்லது ஒரு மாயத்திரையோ தான் என் மனக்கண்ணை மறைத்திருக்கவேண்டும். வீண்பேச்சுப் பேசிக் களிக்கும் அற்பர்களுடன் கூடி, பெரியோர்கள் வெறுக்கும் வகையில் நடந்துகொண்டேன். எனக்கும் உய்தி இருக்க முடியுமா? நான் உய்வேனு?' அவன் மனம் இவ்வாறு கலங்கியது.

'அறவோர்க்கு அளித்தல் முதலிய அறங்களைச் செய்யாது வறிதே வாழ நேர்ந்ததைத் தவிர வேறு கவலை எனக்கு இல்லை. அந்தக் கவலையும் இன்ருேடு தீர்ந்தது. தங்கள் சொற்படி ஒழுகுதலே எனக்கு இன்பம். அந்த இன்பத்தையும் தங்களோடு மதுரைக்குப் புறப்பட்ட நாள்முதல் அநுபவித்து வருகிறேன்' என்று சொல்லிக் கண்ணகி அவனைத் தேற்றுகின்ருள். தன் இளமை வறிதே கழிந்ததை எண்ணித் தான் என்றுமே வருந்தியதில்லை என்பதை அவள் குறிப்பாகப் புலப்படுத்துகின்ருள். எதைப்பற்றியும் எண்ணிவருந்தாமல் தன் கணவன் மகிழ்ச்சியுடன் இருக்கவேண்டும் என்பதே அவளுடைய ஆசை. நக்கீரர் நெடுநல்வாடையிற் கண்ட பாண்டிமா தேவியைக் காட்டிலும் இளங்கோ நமக்குக்காட்டும் தமிழ்ப்பெண் எத்துணைச் சிறந்தவள்? பெண்ணுள்ளத்தின் இயல்பை உள்ளவாறு அறிபவர் அவர் தாமே!

சாப்பிட்டு முடிந்தபின் கோவலன் சிலம்பு

களுள் ஒன்றை எடுத்துக்கொண்டு நகருக்குள் செல்லப் புறப்படுகின்றான். சுற்றமும் ஆயமும் சூழப் பெருமையாக வாழ்ந்த கண்ணகி இப்போது தனிமையாக இருக்க நேர்ந்ததை எண்ணியபோது அவனுக்குக் கண்ணீர் பொங்கியது. அவன் அதை அடக்கிக்கொண்டு, அவளை இறுகத்தழுவி 'மயங்காதே, கண்ணகி! விரைவில் திரும்பிவருகிறேன்' என்று அவளிடம் விடைபெற்றுக்கொள்கிறான். கண்ணகி அவனுடைய குஞ்சியில் அணிந்திருந்த கண்ணி ஒன்றை எடுத்துத் தன் கூந்தலில் செருகிக்கொள்கிறாள். பேசமுடியாமல் உணர்ச்சி பொங்கும் வேளைகளில் ஆடவர்கள் கண்ணீர் மல்க முகத்தை முகத்தைப் பார்ப்பார்கள்; பெண்கள் ஏதோ ஒரு சிறு காரியம் செய்து, அதன் மூலம் ஆயிரம் வார்த்தைகளாலும் விவரிக்க முடியாத அரிய பெரிய செய்திகளை மௌனமாக வெளியிட்டு விடுவார்கள். அவள் தன் கணவனுடைய தலையில் அணிந்திருந்த மலரை எடுத்துத் தன் கொண்டையில் சூடிக்கொண்டு, அவனை வழிவிட்டனுப்பியதை நாம் மறக்கமுடியுமா? கோவலன் செத்த பிறகுந்தான் அவளால் அதை மறந்துவிடமுடியுமா?

வாழ்க்கையில் பிறந்த புதிய நம்பிக்கையும் கண்ணகியின் அன்பும் துணையாகத் தனது தீயொழுக்கங்களை எண்ணி வருந்தித் திருந்திய கோவலன் மதுரைத் தெருவழியே செல்கிறான். பொல்லா விதியும் அவனைப் பின் தொடர்ந்து போகிறது. அதற்கு இதயம் இருந்தால் அது கோவலனுக்கு இரங்கியிருக்க வேண்டும், கண்ணகியின் பொருட்டாவது அவனுக்கு இரங்கியிருக்க வேண்டும். 'எய்யாக் கடலில் விழுந்து விட்டாலும்

நல்விதி இருப்பவன் பிழைத்துக் கொள்வான். நல்விதி இல்லாதவன் பொற்கிண்ணத்தில் வார்த்த அமுதத்தைக் குடிக்கும்போதும் சாவான்.' என்று திருத்தக்க தேவர் சொல்வது சரி.

ஆண்டில் இளையனாயினும் அறிவில் முதியன் என்று, மாடலன் முதலிய மேதைகள் பாராட்டும் கோவலன், தன்னுடைய சிலம்பைத் தன்னுடையதுதான் என்று மறுத்துச் சொல்லும் மனத்திடம் இன்றி, ஒரு பொய்யனுடைய சொல்லுக்குப் பணிந்து உயிரை இழக்கின்றான். கழிந்த காலம் போக, இனி உள்ள காலத்திலாயினும் ஒழுங்காக வாழ்க்கை செய்யவேண்டுமென்று தவித்த நல்ல மனிதன் ஒருவனைக் கொன்று விதி பிழை செய்தது. அவனைச் சூழ்ந்து காத்து நின்ற கண்ணகியின் புனிதமான அன்புக் கோட்டையைக் கடந்து சென்று விதி அவன் உயிரைக் களவு செய்தது. களவு செய்தவர் யார் இங்கே? பொற்கொல்லன், பாண்டியன், விதி—இம்மூவருமே, கோவலன் அல்லன்.

## VI

ஆயர்பாடியிலே தீயநிமித்தங்கள் பல நிகழ்கின்றன. என்ன வருமோ என்று எல்லாரும் அஞ்சுகிறார்கள். கண்ணகிக்குத் தான் தன் ஊரில் வைத்துக் கண்ட தீய கனா நினைவுக்கு வருகிறது. ஊது உலை தோற்க உயிர்த்தது அவள் நெஞ்சம். உடல் நடுங்கியது. 'என் காதலருக்கு வஞ்சம் செய்தவர்கள் யார்'? என்று மதுரையிலிருந்து வந்தவரிடம் வினவுகின்றாள். 'அரண்மனைச் சிலம்பைக் களவு செய்தான் என்று உன் கணவனைக் கொன்று

விட்டார்கள்' என்று ஒருத்தி சொன்னாள். உடனே கண்ணகி,

'பொங்கி எழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடும் சேண்நிலங் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள்; தன் கேள்வனை
எங்கணு என்னு இனைந்தேங்கி மாழ்குவாள்.'

உயிர்போன உடம்பானாள்.

கோவலனையும் கண்ணகியையும், மதுரை நகரத்து ஆயர்கள், நல்லவர்கள் என்று நம்பி அவர்களுக்கு உறைவிடம் கொடுத்து, உணவுப் பொருட்களும் அளித்து அவர்களுக்கு அன்போடு ஆதரவு செய்தார்கள். இப்போது அவர்கள் வேற்றூரிலிருந்து வந்த 'திருடர்கள்' என்பது வெளியாகிவிட்டது. பாண்டிய மன்னன் ஒருவன் அப்படித் தீர்ப்பளித்து விட்டானென்றால், அதில் தவறே இருக்கமுடியாது. 'நிழல்வாய் நேமி கடம் பூண்டு உருட்டும் கௌரியர்' அல்லரோ அவர்? ஆகவே, கண்ணகி தன் கணவனை இழந்ததற்காக அழுவாளா? தன் சிறுமையையும் தனிமையையும் நினைத்து அழுவாளா? அல்லது உலகம் தம்மீது சுமத்திய பழியை எண்ணி அழுவாளா? எல்லாவற்றையும் எண்ணி அழுதாள். 'இறந்தாரை எழுப்புதல் இயலாது, ஆனால் நேர்ந்த பழியைத் துடைக்கலாம்; துடைத்தே ஆகல்வேண்டும். அதனைச் சுமந்துகொண்டு தானும் தன் கணவனோடு சாதல் இருவர்க்கும் இருவர்தம் குலத்துக்கும் குடும்பத்துக்கும் பெருமை தராது.' மானத்தமிழ்மகள் உள்ளத்தில் கற்பிப்பார் இன்றித் தானே பளிச்சிட்டது இவ்வுண்மை.

இதுவரை அறச்செல்வியாக விளங்கி வந்த

கண்ணகி அம்மயக்கத்திலிருந்து எழுந்தபோது மறச்செல்வியாக நிமிர்ந்தாள். இதற்கு முன்னர் அவள் கணவனுக்கு அடங்கிய பெண். தன் உணர்ச்சிகளை தன் கணவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு, அவன் உணர்ச்சிகளை ஏற்பதில் இன்பங்காணும் பெண் வாழ்வு வாழ்ந்தவள். அந்த வாழ்வின் வேரையே கல்லுவதாகிய இடர்கள் உற்ற போதும் அவள் பெண்ணாகவே வாழ்ந்து சாதித்தாள். அந்தப் பெண்கள் மாணிக்கம் இப்போது தன் உணர்ச்சிகட்குத் தானே தலைமை வகித்தாள். 'அரசனுடைய அநீதியால் என் கணவர் இறந்தார். அழுதுவிட்டு, அப்படியே அரசனைச் சும்மா விடேன்.' இங்ஙனம் அவள் உள்ளத்தில் தலை தூக்கிய வீரம், சோகம் கலந்த புலம்பலாகவே கொப்பளிக்கின்றது.

'மன்பதை அலர்தூற்ற மன்னவன் தவறிழைப்ப
அன்பனை இழந்தேன் யான் அவலங்கொண்டு அழிவலோ?
மறனோடு திரியும்கோல் மன்னவன் தவறிழைப்ப
அறனெனும் மடவோய்யான் அவலங்கொண்டு அழிவலோ?
செம்மையின் இகந்தகோல் தென்னவன் தவறிழைப்ப
இம்மையும் இசையொரீஇ இனைந்தேங்கி அழிவலோ?

'இப்பிறவியில் எங்கள் புகழ் கெடவிடேன்......காய்கதிர்ச் செல்வனே! என் கணவன் கள்வனோ?' என்று கேட்டாள். ஆயர் சேரியிலுள்ள பெண்களின் காதுகளும் கேட்கும்படி, சூரியன் கண்ணகிக்கு விடை அளித்தான் :

'கள்வனோ அல்லன், கருங்கயற் கண்மாதராய்,
ஒள் எரி உண்ணும் இவ்வூர்.'

பின்னர்த் தாமதிக்காமல், தன்னிடமிருந்த சிலம்பைக் கையில் எடுத்துக்கொண்டு மதுரைக்

குள் சென்ருள். 'மதுரை நகரத்து மாதர்களே, என் கணவர் கையிலிருந்த சிலம்போடு சேர்ந்த மற்றச் சிலம்பு இது. சிலம்புக்கு விலைகொடுத்து வாங்கும் தகுதியில்லாமல், உங்கள் அரசன் என் கணவரைக் கள்வரென்றுகூறி அவரைக் கொன்று விட்டான். இது அநியாயம். இறந்த என் கண வரை உயிரோடு எழுப்பிக் காண்பேன். அவர் என்ஞேடு பேசுவார். அந்தப் புதுமையை இன்று நீங்கள் காண்பீர்கள்.' அழுது கொண்டே மதுரை வாசிகளுக்கு இப்படி உண்மையை விளக்கிஞள் கண்ணகி.

மதுரை மக்கள் திகைத்தனர். 'உலகத்து உயிர்களைக் குளிரச் செய்வதாகிய மன்னவன் குடை வெம்மை விளைத்தது எப்படி?'

கண்ணகியின் ஆவேசத்தைக்கண்டு நடுங்கி னர். 'கையிற் சிலம்புடன் வந்த புதிய தெய்வம் இது, இவள் பெண் அல்லள். நமது மதுரைக்கு என்ன நேருமோ?'

கண்ணகி எழுப்பிய புயல் மதுரை நகரத்து மூலைமுடுக்குகளிலும் சென்று மோதியடித்தது. தெருக்களிலும் வீடுகளிலும் எல்லாரும் இதே பேச்சைத்தான் பேசுகிருர்கள்.

இந்தப் பேச்சொலி அடங்கும்படி கண்ணகி யின் அழுகைஒலி மீண்டும் எங்கும் எதிரொலிக் கின்றது. அவள் கொலைக்களத்திலே கோவலனது பிணத்தின் மேல் விழுந்து அதனைத் தழுவிக் கொண்டு கதறுகிருள் :

என்னுறு துயர்கண்டும் இடருறும் இவள் என்னீர்
பொன்னுறு நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ,
யாருமில் மருள்மாலை இடருறு தமியேன்முன்
தார்மலி மணிமார்பம் தரைமூழ்கிக் கிடப்பதோ,

கண்பொழி புனல்சோரும் கடுவினை உடையேன்முன்
புண்பொழி குருதியிராய்ப் பொடிஆடிக் கிடப்பதோ,
மன்பதை பழிதூற்ற மன்னவன் தவறிழைப்ப
உண்பதோர் வினைகாணு இதுவென உரையாயோ?

கணவனை இழந்த துயரம், அரசன் இழைத்த தவறு—இரண்டும் அவள் உள்ளத்தில் சோகத்தையும் வீரத்தையும் மாறிமாறி எழுப்புகின்றன. இறுதியில் சோகத்தின் உதவியால் வீரமே வீரமுறுகின்றது.

'இந்த ஊரிலே பெண்கள் இருக்கின்ருர்களா? பெரியோர்கள் இருக்கின்ருர்களா? தெய்வம் இருக்கின்றதா?' இந்த மூன்றும் இல்லாததால்தான் இந்த அநியாயம் நேர்ந்திருக்கிறது!

அக்கற்புத் தெய்வம் பிணமாகக் கிடந்த கோவலனை தழுவிக்கொண்டபோது, அந்த பட்ட மரம் தளிர்த்தது. அவன் உயிர் பெற்று எழுந்தான். வாடிய அவள் முகத்தில் வடிந்திருந்த கண்ணீரைத் தன் கையால் துடைத்தான். செத்துப் போன தம் கணவர் திரும்பவும் பிழைத்துக்கொள்ள வேண்டுமென்றுதான் எல்லாப் பத்தினிமார்களும் விரும்புகின்ருர்கள். பிழைத்துக்கொள்வார் என்றும் நம்புகின்ருர்கள் சிலர். அவர்களுடைய அன்பும் பேதைமையும் அத்துணை அளவற்றவை. எல்லாப் பெண்ணுள்ளங்களையும் இயக்கும் இவ்வாசையே கண்ணகியின் உள்ளத்தில் தன் கணவன் பிழைப்பான் என்ற நம்பிக்கையை எழுப்பியது. அதனைப் பொருளாக வைத்துக்கொண்டு கதாசிரியர் இளங்கோ கற்பனை செய்கிருர். கோவலன் உயிர் பெற்று எழுந்து, 'அழாதே, கண்ணே, நான் வருகிறேன்' என்று விடை பெற்றுக்கொண்டு விண் சென்றதாகக் கூறுகிருர். செத்துப்போன ஒரு

கணவனுக்குச் சில நிமிடங்கள் திரும்பவும் பிழைத்துக்கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் அவன் என்ன செய்வானே அதைத்தான் கோவலனும் செய்கிறான். அப்படியே கண்ணகியும் செத்துப்போன கணவன் திரும்பப் பிழைத்துக் கொள்வதைக் கண்டால் ஒரு மனைவி என்ன செய்வாளோ அதைத்தான் தானும் செய்தாள். கோவலன் காலடியில் விழுந்து அவற்றைத் தழுவிப் பிடித்துக் கொண்டாள்.

ஒரே மௌனமாக முடிந்துபோகிற மனிதனுடைய மரணத்தில், இறந்துபோனவனும் இறக்கக் கொடுத்தவர்களும் நேர்ந்த மரணத்தை ஒப்புக் கொண்டு, மீண்டும் ஒருவரையொருவர் வழியனுப்பிக்கொள்ள இப்படி ஒரு வகை இருக்குமாயின் இருபாலார்க்கும் அது திருப்தியை அளிக்கக்கூடும் என்று இளங்கோ கருதினார்போலும்!

கோவலன் மீண்டும் பிணமாக விழுந்தான். கண்ணகி அவன் காலடியில் 'பிணமாகக்' கிடந்தாள். அவள் உணர்வு வந்து எழுந்தபோது பாண்டியன் அவள் கண்முன் வந்தான். 'அவனைப் பழிவாங்கி, தன் கணவன் பழியைத் துடைத்துவிட்டு அவனோடு மடியவேண்டும்.' இந்த முடிவுக்கு வந்து அவள் எழுந்தாள். அரண்மனையை நோக்கி விரைந்தாள்.

கணவனை இழந்த துயரக்கோலம்; விரித்த கூந்தல்; முகத்தில் கோபம்; அகத்தில் செற்றம்; கையில் ஒற்றைச் சிலம்பு; அரண்மனை வாயிலில் காட்சி அளிக்கின்றாள் கண்ணகி. வாயிற் காவலன் அவளைக் கண்டுகொண்டான். 'யார் இவள்? பெண்தானா? இல்லை, கொற்றவையா, பிடாரி,

பத்திரகாளியா? அல்லது துர்க்கையா?' ஒன்றும் தோன்றாமல் நடுங்கினான்.

'வாயிலோயே வாயிலோயே
அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து
இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே,

'கையில் ஒற்றைச் சிலம்புடன் வந்திருக்கிறாள் ஒருத்தி என்று அரசனிடம் சொல்'. மன்னனுடைய வாயிற் காவலனுக்குக் கட்டளையிட்டாள் கண்ணகி. அவன் ஓடிச் சென்று அரசனிடம்,

'கணவனை இழந்தாள் கடையகத்தாளே
கணவனை இழந்தாள் கடையகத்தாளே'

என்று, சொன்னதையே சொல்லிச் சொல்லித் தடுமாறினான்.

அரசனுடைய அநுமதி பெற்றுக் கண்ணகி அவன் முன் சென்றாள்; நீதி தங்கும் பாண்டியர்களது அரண்மனையிலே தன் வினைவயத்தால் தனக்கு மட்டும் அநீதி நடந்துவிட்டது என்று எண்ணியபோது, அழுது அழுது வறண்டுபோன அவள் கண்கள் மீண்டும் கண்ணீரைப் பொழிந்தன. அந்தக் கோலத்தோடு அவள் பாண்டியன் முன்போய் நின்றாள். மக்கள் கண்ணீரைக் கண்டு கலங்கும் இயல்புடைய அவன் கேட்கின்றான்,

*நீர்வார் கண்ணை, எம்முன் வந்தோய்!*
*யாரையோ நீ? மடக் கொடியோய்!*

ஆத்திரத்தில் அறிவிழந்த கண்ணகியின் பதில், நீதியிழந்த மன்னனைத் துரும்பென மதித்துப் பேசும் தமிழ்ப் பெண்ணின் பேச்சு அவையோரைத் திகைக்கச் செய்கிறது. 'ஆராய்ச்சி இல்லாத அரசனே, புறவுக்குத் தன் உடலையும், பசுவின் கன்றுக்குப் பதில் தன் மைந்தன் உயிரையும்

கொடுத்து நீதியைப் பேணிய சிபியும், மனுநீதிச் சோழனும் இருந்து அரசாட்சி செய்த பூம்புகார் என் ஊர்.

> ' ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி
> மசாத்து வாணிகன் மகனையாகி
> வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச்
> சூழ்கழல் மன்னா ! நின்னகர்ப் புகுந்தீங்கு,
> என்கால் சிலம்பு பகர்தல்வேண்டி நின்பால்
> கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி;
> கண்ணகி என்பது என் பெயரே '

தன் குடிகளுக்குத் தந்தையாகவும் கண்கண்ட கடவுளாகவுமிருந்த பாண்டியன் இத்தகைய நிதான மற்ற பேச்சுக்களைக் கேட்டு அறியாதவனல்லன். 'உன் கணவன் எம் அரண்மனைச் சிலம்பைத் திருடினான். கள்வனைக் கொல்லாமல் விடுவது அரச நீதியாகாதல்லவா?' என்று கேட்கின்றான்.

'என் கணவர் கையிலிருந்த சிலம்பு உம்முடைய சிலம்பா? எங்கே உம் சிலம்பு? பார்க்கலாம். என் சிலம்பினுள்ளிருக்கும் பரல் மாணிக்கம்.'

கலக்கமுற்ற காவலனுக்குக் கண்ணகியின் பதில் மகிழ்வூட்டியது. 'தே மொழி உரைத்து செவ்வை நன்மொழி. நமது சிலம்பின் பரல் முத்து. கொண்டு வாருங்கள் நமது அச்சிலம்பை.'

நொடிப்பொழுதில் சிலம்பு கொண்டுவரப் பட்டது.

யாரும் எதிர்பாராத ஒன்றைக் கண்ணகி செய்தாள். கொண்டு வரப்பட்ட சிலம்பை எடுத்துத் தரையில் எறிந்து உடைத்தாள். அதனுள்ளிருந்து மாணிக்கப் பரல்கள் தெறித்துச் சிந்தின. அவற்றைக் கண்டு, பாண்டியன்

'தாழ்ந்த குடையன், தளர்ந்த செங்கோலன்
பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது, கெடுக என் ஆயுள்'

என்று சொல்லிக் கொண்டே மயங்கி வீழ்ந்து மாண்டான். நீதியே உயிராக வாழ்ந்த செழியர் மரபின் செம்மல் மாண்டான்! கணவன் பொருட்டே உயிர் வாழ்ந்திருந்த கோப்பெருந்தேவியும் அவன் அடிகளை வணங்கிவிட்டு அவனோடு மாண்டாள்.

கண்ணகியும் அங்கேயே விழுந்து மாண்டிருக்கலாம். நீதிக்கடவுளின் பீடத்தே, அல்லது, பிணமாய்க் கிடந்த பாண்டியனையும் பெருந்தேவியையும் வணங்கி விட்டு, மீண்டும் கொலைக் களத்துக்குப் போய்த் தன் கணவனைக் கட்டித் தழுவிக்கொண்டு அங்கே பிணமாகி இருக்க வேண்டும். அதன்பின் இளங்கோ அவளை எடுத்துத் தெய்வமாக்கியிருக்க வேண்டும்.

ஆனால், கண்ணகியின் உள்ளத்தில் இளங்கோ பெருக்கிய வீரவெள்ளம் கரையை அழித்துக் கொண்டு ஓடியது. செத்துவிழுந்த கோப்பெருந்தேவி உயிருடன் இருப்பதாக எண்ணிக்கொண்டு, 'நானும் பத்தினிமார்கள் பிறந்த பட்டினத்திலே பிறந்த ஒரு பத்தினியேயானால் உன்னை உயிரோடு வாழவிடேன். மதுரையையும் அழிப்பேன்.

'நான்மாடக் கூடல் மகளிரும் மைந்தரும்
வானக் கடவுளரும் மாதவரும் கேட்டீமின்
யானமர் காதலன் தன்னைத் தவறிழைத்த
கோனகர் சீறினேன் குற்றமிலேன் யானென்று
இடமுலை கையால் திருகி, மதுரை
வலமுறை மும்முறை வாரா அலமந்து

மட்டார் மறுகின் மணிமுலையை வட்டித்து
விட்டாள் எறிந்தாள்'

கூடல் நகரில் புகையழல் மண்டிற்று. அவளும் கொல்லனது உலைக்குருகு போல நெருப்பாக உயிர்த்துக் கொண்டு, நகரத்தின் தெருக்களிலும் சந்துகளிலும் சென்று நகரைச் சுற்றி வந்து கொண்டிருந்தாள். மாட மதுரையும் மன்னுயிர் களும் அவள் வெகுளித்தீயில் வெந்து சாம்பராகிக் கொண்டிருந்தன.

## VII

அரசன் இழைத்த தவற்றுக்காக அவனுடைய நகரத்தை அழிப்பது குற்றம் என்று அவள் உள் ளம் அவளுக்குச் சொன்னது. இளங்கோ, அதைக் கேட்க விடவில்லை அவளை. 'பெண்'ணுக்குச் செய்யப்படும் தீங்கினை அவர் எப்படிப் பொறுப் பார்? மதுரையை எரிக்கும்படி தான் ஏவல் பெற் றிருப்பதாக அக்கினிதேவன் அவளிடம் சொல் கிறான். நெருப்புக்குத் தப்பிய சில பெரிய பெண் கள், 'கணவனை இழந்தவள் பழிவாங்காமல் விடு வாளா?' என்று வீர மகிழ்வுடன் பேசிக்கொண்டு, அக்கினி தேவனைத் தொழுது வாழ்த்துகின்றார்கள்.

மதுரையை எரித்த அந்நெருப்பில் அவர் மிக மிக அருமையுடன் பேணி வளர்த்த கண்ணகியின் பெண்மையும் தீப்பட்டது. விதியின் விளைவால் கோவலன் மாண்டான், தன் நீதியால் பாண்டியன் தன் தேவியோடு மாண்டான், கண்ணகியின் 'பட்டிமை'யால் (மீச்செலவு) மதுரை எரிந்தது. அடிகளின் மீச்செலவு கண்ணகிக்குப் பெருமை அளிப்பதாய் இல்லை. அழிக்கத் துணிந்த பெண்

அழிப்பாள், தானும் அழியும் வரை அழிப்பாள். அம்மைத் தெய்வம் 'பேய்ச்சி' ஆவது அதன் இயல்பு. பொறுத்துப் பொறுத்து அன்பு செய்வதிலும், பொருதபோது நீருகும்வரை நூறுவதிலும் எல்லே காண்பது பெண். இளங்கோதாம் என் செய்வார்?

கண்ணகிக்குற்ற குற்றத்தைத் துடைக்க விழைகிருர் சாத்தனுர். வஞ்சியில் தெய்வமான அவளேக் கண்டு வழிபடுவதற்காகச் சென்ற மணிமேகலே அவளிடம் 'அம்மா, மதுரையை ஏன் எரித்தீர்கள்?' என்று கேட்கிருள். அதற்குக் கண்ணகி அளிக்கும் விடை:

> 'சீற்றம் கொண்டு செழுநகர் சிதைத்தேன்
> மேற்செய் நல்விஜனயின் விண்ணவர்ச் சென்றேம்
> அவ்விஜன இறுதியின், அடுசினப் பாவம்
> எவ்வகை யானும் எய்துதல் ஒழியாது
> நீங்கரும் பிறவிக் கடலிடை நீந்திப்
> பிறந்தும் இறந்தும் உழல்வோம் பின்னர்
> பிறவி நீத்த பெற்றியம் ஆகுவம்.'

'முற்பிறப்பில் செய்த நல்விஜனயால் தேவராயிஞேம். மதுரையை எரித்த பாவத்தால் மீண்டும் பல பிறவி எடுத்து உழல்வோம். பின்னரே பிறவி நீங்கும் பெற்றி எமக்கு எய்தும்' என்று சொல்கிருள் கண்ணகி.

பெண்மைப் பெருங்கடல் கரை கடக்கத் துணிந்துவிட்டால் தேவர்களும் அதன்முன் செல்லார், நில்லார். மதுரையை அழித்த பத்தினியின் முன்னே ஆதிப்பூதத்து அதிபதிக் கடவுளும், அரைச பூதத்து அருந்திறற் கடவுளும், இறைவன் வடிவின் வியன் பெருங் கடவுளும், பூதத் தலேவன்

என்போன் தானும் நில்லாது ஓடினர். சிவாம்ச மான மதுராபதி அவள் முன் வருதற்கு அஞ்சி, அவள் பின்நின்று பேசி அவள் சினத்தைத் தணிக்க முயன்றது. கைம்மாறு கருதாது தூய அன்பின் வழியதாய் வாழும் வனிதையின் வன்மை அது.

அதனை அறியாது அவளை இகழ்ந்த அறியாச் சமணர்க்கும் பௌத்தர்க்கும் அறிவு கொளுத்தும் படி அறிஞர் இளங்கோ மதுரையில் கொளுத்திய நெருப்பு அப்புறச்சமயிகளையும் எரித்து ஒழித்தது. தமிழகத்திலே புறச் சமயங்கள் தலைதாழ்ந்தன. பெண்ணின் அருமையும் பெருமையும் விளக்கப் பட்டன. சமண் இருள் நீங்கித் தமிழ் உள்ளம் தன்னறம் காணும் தனியொளி பெற்றது. பெண் தன் சங்க காலத்து முன்னை உயர்நிலை உற்ருள். பெண்ணின் பிறவிப் பெருமைகளை விளக்கப் புகுந்த முயற்சியில் வெற்றியுற்று இளங்கோவும் தமிழகத்தில் அமரர் ஆனர்.

தமிழ் மக்கள் பெயரால் சேரன் கண்ணகியைக் கடவுளாக்கினன். எல்லாரும் அவளை வணங்கினர் கள். இளங்கோவடிகளும் அவளை வணங்கினர்.

# 4. செந்நெறி கண்ட திருவுள்ளம்

## I

இராமன் மிதிலைநகர்த் தெருவிலே உலாவந்து கொண்டிருக்கிறான். தெருவின் இரு மருங்கினும் நின்று அந்நகரத்து நங்கையர்கள் அவன் திரு மேனி யழகைப் பார்க்கின்றார்கள். சிலர் அவனுடைய தோள்களையே பார்த்துக்கொண்டு நிற்கின்றார்கள், சிலர் அவனுடைய தாள்களைப் பார்த்துக்கொண்டு நிற்கின்றார்கள். மற்றும் சிலர் அவனது தடக் கைகளையே பார்க்கின்றார்கள். இவ்வாறு ஒவ்வொருவரும் அவனுடைய ஒவ்வோர் அங்கத்தையே பார்த்து அதன் அழகிலேயே ஈடுபட்டு நின்றுவிட்டனரேயன்றி, அவனுடைய மற்ற அங்கங்களையேனும் எல்லா அங்கங்களும் சேர்ந்து விளங்கும் உடலழகையேனும் கண்டு களிக்கத் தவறி விட்டனர்.

இராமன் கடந்து சென்றுவிட்டான். அதன் பிறகு அங்கங்கே நின்றவர்கள் அவனுடைய அழகைப் பற்றிப் பேசிக்கொள்ளத் தொடங்கினர். இராமன் மிகவும் அழகுடையவன் என்பதைப் பற்றியும், அவன் அழகு தங்கள் மனத்தைக் கவர்ந்து விட்டது என்பதைப் பற்றியும் அவர்களுக்குள் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால் ஒவ்வொருவரும் தாம் தாம் கண்ட அங்கமே (தாம் காணாத) மற்ற அங்கங்களைக் காட்டிலும் அழகுடையது என்று வாதிக்கலாயினர். வாதம் பெரிதாகி, ஓய்கிற பாடாய் இல்லை. மதவாதிகள் தங்கள் தங்கள் சமயமே சிறந்தது என்று வாதித்துச் சண்டையிட்டுக் கொள்வதுபோல இருந்தது அவர்

களுடைய வாதமும், பிடிவாதமும். மதவாதிக ளுடைய வாதங்களில் உண்மை இல்லாதிருப்பது போலவே, அந்த மாதர்களுடைய வாதங்களிலும் உண்மை இல்லை. இராமனுடைய அங்கங்களில் எதுதான் அழகு இல்லை! மேலும், அவனுடைய கால் அல்லது கையை மட்டும் பார்த்தால் அவ னையே பார்த்ததாகி விடுமா? அவனுடைய நிற மென்ன, வடிவென்ன, முகமென்ன, கமலக் கண்க ளென்ன, இன்னும் எத்தனையோ எழில் உறுப்புக் கள், அம்சங்கள் இருக்கின்றன. இவையனைத்தும் சேர்ந்துதான் இராமன்; கண்டவர் மனத்தைக் களிக்கச் செய்யும்படியான பேரழகன். உடலழ கைக் காட்டிலும், அகத்தின் ஒளி புறத்தில் விளங்குவதாகிய கலை வேறு இருக்கிறது. இவ் வளவையும் விட்டுவிட்டு அந்தப் பேதை மாதர்கள் தாம் தாம் கண்ட உறுப்பு ஒன்றுமே அழகுடைய தென்று சாதித்து, தாமே இராமனைச் சரியாகக் கண்டு விட்டதாகவும் எண்ணிக் கொண்டார்கள். அதனைக் கூறும் கம்பருடைய பாட்டு இது:

தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழல் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கை கண்டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்னான் உருவுகண் டாரை ஒத்தார்.

இதன் ஈற்றடியில் சமய வாதங்களைப் பற்றிக் கம்பருடைய கருத்து ஒன்று சொல்லப்படுவதைப் பார்க்கின்றோம். திருத்தமாக அமைக்கப்பட்டுள்ள சமயங்கள் பல. அவை எல்லாவற்றாலும் உரைக்கப் படும் இறைவன் ஒருவனே தான். ஆனால் ஒவ் வொரு சமயமும் அவ் விறைவனுடைய எல்லா இயல்களையும் வடிவங்களையும் முற்ற வெடுத்துக்

கூறுது, அவனது ஒவ்வொரு வடிவத்தையும் சில சில குணங்களையுமே கூறுகின்றது. எல்லாச் சமயங்களும் கூறுகின்ற எல்லா வடிவங்களையும் இயல்புகளையும் ஒரே இறைவனது வடிவமாகவும் இயலாகவும் தொகுத்துக் கூறிவிட்டால் வாதத்துக்கு இடமே இராது.

சமயவாதிகளுடைய தர்க்கங்களுக்கு இங்ஙனம் நடுநிலைத் தீர்ப்புரைக்கும் கம்பருக்கு, சொந்தமான கடவுள் கொள்கை ஒன்றும் இருந்தது. அதனை அவருடைய காவியத்தின் முதற் செய்யுளிற் காண்கின்றோம்.

உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே.

எல்லா உலகங்களையும் படைத்துக் காத்து அழிப்பதனையே தொழிலாக உடையவனை வணங்குவோம் என்று சொல்கிறார். அவருடைய கடவுட் கொள்கைக்குச் சமய நூல்களும், விளக்கங்களும் வேண்டுவதில்லை ; இல்லவும் இல்லை. ‘உலகங்களும் அவற்றின் இயக்கங்களும் இருக்கின்றன. இவற்றுக்கு மூல காரணமாகிய பரப்பொருளும் ஒன்று உண்டு’ இவ்வாறு அவருடைய சமயம் பகுத்தறியும் அறிவுடன் இரத்தினச் சுருக்கமாகவும், வாதமின்றி எல்லாரும் ஏற்பதாகவும் அமைந்திருந்தது. எத்தனை பேர் கூடி எத்தனை காலம் வாதித்தாலும் என்ன முடிவுக்கு வருவார்களோ அந்த முடிவினைத் தான் அவர் இந்த நான்கு அடிகளில் சொன்னார். கம்பர் கண்ட இத்தெளிவுக்குக் காரணம் என்ன?

சங்க காலத்தின் இறுதியிலேயே தமிழ் நாட்

டில் பிற்காலத்தில் வளர்ந்து முதிரப்போகும் சமயப் பிணக்குகளுக்குரிய வித்துக்களைக் காண்கிறோம். எனினும் பரம்பரைத் தமிழரசர்களுடைய தனித் தமிழ் ஆட்சி நிலை பெற்றிருந்த காலம்வரை அவ் வித்துக்கள் முளைத்துப் பெருங்காடாக வளராதபடி அடங்கிக் கிடந்தன. தமிழ் நாட்டின் சரித்திரத் தில், முதல் முதல் தமிழ் நாட்டை நெடுங்காலம் ஆண்ட அந்நியர்கள் பல்லவர்களே. பல்லவர் களைத் தொண்டை மண்டலத் தமிழர்களே என்றும், பிறவாறும் கூறுவார் உளர். எனினும் அவர்க ளுடைய மரபுகள் தனித்தமிழ் மரபுகளுக்கு மாருக இருந்தன என்பதில் ஐயமில்லை. கி. பி. ஐந்தாம் நூற்ருண்டுக்குப் பின் ஏழு, எட்டாம் நூற்ருண்டு வரை அவர்கள் ஆட்சி ஓங்கியிருந்தது. சோழர் முதலிய பழந்தமிழரசர்கள் அவர்கட்குக் கப்பம் கட்டும் சிற்றரசர்களாக அடங்கி வாழ்ந்தனர். அக் காலத்தில் தமிழ் மக்களுடைய மொழி, இலக்கியம், எண்ணங்கள், வாழ்வியல் இவற்றில் நிலவிய பழமை புதுமைக்கு இடங்கொடுத்து மறையத் தொடங்கினது. அகம், புறம் என்ற இரண்டு துறைகளுள் அமைந்து கிடந்த தமிழர் வாழ்க்கை யில் 'மதம்' என்ற மற்ருென்று வந்து புகுந்தது. புகுந்தது புகுந்ததோ டமையாது விரிந்தது. அதனுல் புராண இதிகாசங்களும் கோயில்கள் கோபுரங்களும் எழுந்தன.

புலனுக்கு எட்டும் பருப்பொருள்களின் நுட் பங்களைத் தேர்ந்து, அவற்றைத் தம் வாழ்க் கையின் அடிப்படையாக வைத்துக்கொண்டு ஒற்றுமையுடன் பூசலின்றி வாழ்ந்து வந்த தமிழர்கள், பின்னர், புலன்களுக்கெட்டாத விண்

பொருள் நுட்பங்களைப் பற்றி ஒன்றுக்கொன்று ஒவ்வாத விளக்கங்களைச் சொல்லித் தம்முள் வாதமிட்டுக் கொண்டனர். சமணமும், பௌத்தமும், பின்னர்ச் சைவமும் வைணவமும் மோதிக்கொண்டன. சமயப் பூசல்களுக்குத் தமிழ் நாட்டில் முதல் முதல் வித்திட்டவை சமணமும் பௌத்தமும். பின்னர் அவை நாட்டை விட்டே குடிபோய் விட்டாலும், கம்பர் காலத்துக்கு முன்னர்ப் பழக்கக் குற்றத்தால் சைவ வைணவப் பூசல்கள் தொடர்ந்து நடைபெற்று வந்தன. அவை இரண்டும் வைதிக சமயங்களாதலின், சைவத்தோடு சமணம்போல கொடுமைகள் விளைக்காமல் சொல்லளவிலேயே தாக்கிக் கொண்டன. தாம் வாழும் தாய் நாட்டு உரிமையை இழந்த மக்கள், இனித் தாம் ஏகும் வீட்டுரிமையை வேண்டிப் பூசல் விளைத்துக் கொண்டனர்.

பண்டைத்தமிழர் சமயத்துறையில் அளவுக்கதிகமான சக்தியை விரயம் செய்யாமல், குடும்ப வாழ்க்கைக்கு இன்றியமையாததாகிய பொருளை ஈட்டி, எளிய இனிய நல்வாழ்க்கை செய்து வந்தவர்கள். கடவுள் என்பது ஆண் அல்லது பெண், அல்லது இரண்டுமல்லாத ஒன்று என்று எதனையும் துணிந்து சொல்லக்கூடாத முறையில், கட + உள் = கடவுள்; மனிதனுடைய சிந்தனை முதலியவற்றுக்கு எட்டாது அப்பால் கடந்து உள்ளதாகிய ஒன்று என்று அதற்கு ஒரு பொதுவான பெயரைக் கொடுத்தனர். சாவுக்குப்பின்னுள்ள நிலைமையைப் பற்றியும் கண்டு வந்தவர்போன்று அவர்கள் துணிந்து ஒன்றும் கூறினாரல்லர். அறியக்கூடாதவற்றை அறியப்படாதனவாகவே அறிவுடையோர்

உரைப்பர் அல்லரோ? அறிந்தார்போன்று வகுத்தும் வருணித்தும் உரைப்பவரைக் கண்டு நகுவர் அவர். எனவே, உயிர் வாழ்ந்திருப்பதாகிய இந்த நிலையை, அறம் பொருள் இன்பங்களை விட்டு விடுதலாகிய நிலையையே வீடு என்று கூறினர். கடவுள் உண்டு, வீடும் உண்டு என்ற அளவிலே நின்று கொண்டனர் பழந்தமிழ் மக்கள். அவர்கள் வழிவந்த பின்னோர், நாட்டில் நுழைந்த புதிய கோட்பாடுகளுக்கு மனமிணங்கிப் பிற்காலத்தில் வேறு வேறு கடவுளர்களும் சமயங்களும் வகுத்துக் கொண்டு, கடவுள் வழிபாட்டில் முனைந்தனர். சன்மார்க்கம், மார்க்கத்தினும் சிறந்தது என்பதை மறந்துபோயினர்.

பின், பல்லவர் மறைந்தனர். பழைய மூவேந்தர்கள் மீண்டும் தலைதூக்கினர். அடிமையாட்சியில் சமயப்பூசல்களில் விரயமான தமிழர்களின் சக்தி மீண்டும் ஆக்கவேலையில் திருப்பப்பட்டது. அரசியல், வாணிகம், பொருளாதாரம் முதலியன ஓங்கின. அரசர்கள் எல்லாச் சமயங்களுக்கும் ஆதரவு அளித்து, சமயச் சண்டைகளை ஒழித்துக் கட்டினர். மக்கள் காய்தல் உவத்தல் இன்றி அமர்ந்து எண்ணத்தொடங்கினர். உண்மை உதயமானது. அது கம்பர்காலம். அந்த உண்மையைத் தான் கம்பர் சொன்னார் தம் காப்புச்செய்யுளில்.

புலவர்களுடைய எண்ணத்திலும் வாக்கிலும் அவரவர் வாழ்ந்தகாலமும் சமூக நிலையும் அச்சுப் பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். கம்பர் காலத்திலும் அதற்கு முன்னரும் தமிழகத்தில் வைதிக சமயங்கள் நன்றாகப் பரவி வேர்விட்டிருந்தன. அவற்றை ஒட்டிய இதிகாச புராணக்

கருத்துக்களைக் கம்பருடைய காவியத்திலே காண்கிறோம். மக்களை அலைத்துக்குலைக்கும் சீர்கேடுகளை ஒழித்து நல்வழி காட்டி உய்விப்பவர்களே புலவர்கள். சமயம் சமயம் என்று அடித்துக்கொண்டு அரசனும் குடிகளும், கணவனும் மனைவியும், தமக்கையும் தம்பியும், தந்தையும் பிள்ளையும் ஒருவரோடொருவர் பிணங்கி, அன்போடுவாழும் இன்பவாழ்வை மறந்து உழன்ற மக்களுக்கு வாழ்க்கை வழிகாட்டியாக அருளப்பட்டது கம்பருடைய காவியம். கடவுள் ஒன்று உண்டு; பாவ புண்ணியங்களை மதித்தொழுகும் சன்மார்க்கமே மக்களுக்கு வேண்டுவது; அன்பும் பணியும் ஒப்பற்றவை, மனிதரைத் தெய்வமாக்கி உய்விப்பவை என்று விளக்கினர் கம்பர்.

## II

இனி, கடைச்சங்கத்திற்குப்பின் இளங்கோ கண்ட சமயத் தெளிவு எத்தகையது என்று காண்போம். யாவரும் உரிமையுடன் தத்தம் சமய உண்மைகளைச் சொல்லிக் கொண்டிருந்த அமைதியான காலம் அது. சமயம் காரணமாக ஒருவரையொருவர் திட்டிக்கொண்டும், வெட்டிக்கொன்று கொண்டுமிருந்த பிற்காலம் அன்று. நாட்டிலே சமயங்கள் பல பரவி வேர்விட்டுக் கொண்டிருந்தன. எதிர்காலத்தில் தென்றல் புயலாக மாறிவிடாதபடி தடுத்து நிறுத்தவேண்டிய அவசியத்தை உணர்ந்தார் இளங்கோ. தமிழ் மூன்றாயினும் அது ஒன்றே. அவ்வாறே தமிழரசர்கள் மூவராயினும் ஆட்சி தமிழ் ஆட்சி ஒன்றுதான். தனித் தமிழாலும், தனித் தமிழாட்சியாலும் ஒரே இனமாகத் தழைத்

திருந்த தமிழ் மக்கள் பிற்காலத்தில் சமயத்தின் பெயரால் பிளவுபடக் கூடுமென்று கண்டபோது அவர் வருந்தினர். எல்லாரையும் சாதி முதலிய வேறுபாடு கற்பிக்காத ஒரே சமயத்தைத் தழுவச் செய்துவிடுதல் நலமென்று சாத்தனர் கருதியிருக்க லாம். இளங்கோவின் கருத்து வேறு. காலப் போக்கில் மக்களுடைய சிந்தனைத் திறங்கள் பல்கும்; அவற்றை யாராலும் தடுக்க முடியாது; ஆனல் எல்லாக் கொள்கைகளும் சகிப்புடன் ஒத்தியங்க முடியும், ஒத்தியங்க வேண்டும் என்று அவர் உணர்ந்தார். அவருடைய நோக்கமும் வேட்கையும் முயற்சியும் இதுவே என்பதைச் சிலப் பதிகாரம் முழுவதும் பரக்கக் காண்கிறோம்.

சமயங்கள் யாவும் உண்மை காண்பதற்கு மனிதன் செய்யும் முயற்சியின் முடிவுகளே. அவற் றில் குறைபாடுகள் இருப்பினும் அவற்றைப் பாராட்டுதல் வேண்டும், பழித்தல் கூடாது. இவ் வாறு இளங்கோவின் பரந்த மனத்தில் எல்லாச் சமயங்களுக்கும் இடம் இருந்தது, தமிழகத்தில் எல்லாச் சமயங்களுக்கும் இடம் இருந்ததுபோல. சிலம்பிலே,

**குன்றக் குரவையில் முருகன் புகழ் :**

*சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமு நீங்கா இறைவன்கை வேலன்றே*
*பாரிரும் பௌவத்தி னுட்புக்குப் பண்டொருநாள்*
*சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே.*
*அணிமுகங்க ளோராறும் ஈராறு கையும்*
*இணையின்றித் தானுடையான் ஏந்திய வேலன்றே*
*பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்*
*மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே.*

**சிவபெருமான் :**

நிலவுக் கதிர்முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி உருவத்து உயர்ந்தோன்.
பிறவா யாக்கைப் பெரியோன்.

**திருமால் :**

பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியுங் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே.

**அருகன் :**

அறிவன் அறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
தரும முதல்வன் தலைவன் தருமன்
பண்ணவன் எண்குணன் பாத்தில் பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன்.

**கொற்றவை :**

மதியின் வெண்தோடு சூடும் சென்னி
நுதல்கிழித்து விழித்த இமையா நாட்டத்துப்
பவள வாய்ச்சி தவளவாள் நகைச்சி
நஞ்சுண்டு கறுத்த கண்டி, வெஞ்சினத்து
அரவுநாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்
* * * * * *

பாய்கலைப்பாவை பைந்தொடிப் பாவை
ஆய்கலைப்பாவை அருங்கலப் பாவை.
சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்திச்
செங்கண் அரிமால் சினவிடைமேல் நின்றுயால்
கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை யுருவாய் மறையேத்த வேநிற்பாய்.

இந்திரனுக்குத் தனிச்சிறப்புச் செய்யப்படும் விழாக்காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள

ஏனைத் தேவர்களுக்கும் சிறப்புக்கள் நடத்துகின்ருர் இளங்கோ, அவைகளும் தமிழ்நாட்டுத் தெய்வங்கள் தாமல்லவோ?

பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்
மாலைவெண்குடை மன்னவன் கோயிலும்
மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மரபின் தீமுறை ஒருபால்.

இப்பெரிய தேவர்களின் கோயில்களிற் போலவே, சிறிய தேவர்களின் கோயில்களிலும் சிறப்புக்கள் நடக்கின்றன.

நால்வகைத் தேவரும் மூவறுகணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபால்.

நகரத்தின் மதிலுக்கு வெளியே இருந்த கோட்டங்களிலும் தேவர்களுக்கு வழிபாடுகள் செய்யப்பட்டன. மதுரையின் மதிற்புறத்தே இருந்த பூங்கண் இயக்கியையும் பட்டினி போடவில்லை அவர். ஆயர் மாது மாதரி முறைப்படி அதற்குப் பாற்சோறு படைக்கின்ருள். இங்ஙனம் தமிழ்நாட்டிலே வழிபாடு பெற்று வந்த தெய்வங்கள் பல. அவ்வவற்றுக்குரிய மரபு குன்ருமல் அவற்றைப் பாராட்டி அவற்றுக்குச் சிறப்பும் செய்துள்ளார் அடிகள்.

மக்கள் தத்தம் மனங்கொண்ட தெய்வத்தை வழிபட்டு வந்தனர். மேலும் அக்காலத்தில், ஒரு சமயத்தைச் சேர்ந்த ஒருவர் மற்றச் சமய ஆசாரங்களையும் மேற்கொள்ளத் தயங்கியதில்லை என்

றும் தெரிகிறது. சமணசமய வகுப்பினைச் சேர்ந்த கோவலனுக்கும் கண்ணகிக்கும் 'மாமுதுபார்ப்பான் மறைவழி காட்டிட' வைதிக முறையில் திருமணம் நடக்கின்றது. தமிழர்களுடைய தொன்றியல் மரபின் மன்றலில் வேதச் சடங்கும் கலந்து புதியதொரு பொலிவு ஏற்படுகின்றது. கதையின் எந்த இடத்திலும் கோவலனும் கண்ணகியும் ஆசீவக சமயத்தவர் என்று நாம் கருதுவதற்கு இடமின்றி, தனித் தமிழராகவே இருக்கின்றனர். சமயம் எதுவாயினும் தமிழன் தமிழனாகவே இருத்தல் கூடும், இருத்தல் வேண்டுமென்றே அடிகள் கருதினர். சமயவேறுபாடு தமிழர்க்கு விலக்கு.

செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமானுடைய வண்ணச் சேவடியைத் தன் மணிமுடியில் தரிக்கும் குடக்கோக்குட்டுவன், ஆடகமாடத்து அறிதுயில் அமரும் திருமால் பிரசாதத்தினையும் வாங்கி அணிந்து கொள்கிறான். மறைகள் நான்கும் முற்றக் கற்ற அந்தணனாகிய மாடலன், மலையும் கடலுமாகிய தலங்களைத் தரிசித்து வருபவன் மதுரை நகர்ப்புறத்திலுள்ள சமணப்பள்ளியில் காவுந்தி ஐயை முதலிய சமணத்துறவிகளோடு தங்கி அளவளாவுகின்றான்.

இங்ஙனம் பரந்த நோக்குடன் எல்லாச் சமய மக்களும் கலந்து வாழ்ந்த அன்பு வாழ்வின் பிரதிபலிப்பைச் சிலப்பதிகாரம் முழுவதும் காண்கின்றோம். இதேமுறையில் தமிழ் மக்கள் எக்காலத்திலும் ஒற்றுமையுடன் ஓரினமாய் வாழவேண்டும். சமயம் அவர்களைப் பிரித்துவிடக்கூடாது என்ற அடிகளுடைய வேட்கையையும் அங்குக் காண்கின்றோம். ஆனால் சமய நோய்கொண்ட பிற்காலத்

தவர், தம்மைப்பிடித்த அந்நோய் அடிகளேயும் பீடித்திருக்கவேண்டுமென்று கற்பனை செய்து கொண்டு, அவர் 'எம்மவர்' 'எம்மவர்' என்று இகலும் பேதைமை என்?

சிவனடியைச் சிந்தைசெய்யும் சேரர் குலத்தில் பிறந்து குணவாயிற் கோட்டத்துத் தவம் இயற்றும் துறவியாக இருக்கலாம் அவர். ஆனால் உலகத்தினின்றும் ஒதுங்கிக் கொண்டவரல்லர். மக்களொடு கலந்து வாழ்ந்தவர். குன்றக் குறவர்கள் திருமா பத்தினிக்கு நேர்ந்ததனை அவரிடம் வந்து சொல்லுகின்றார்கள்! சாத்தனாரும் அவருடனிருந்து தமிழ் பேசிக் களிக்கின்றார். படித்தவர்கள், பாமரர்கள் ஆகிய எல்லாவகை மக்களுடைய தொடர்பும் அவருக்கு உண்டு. அவர்களுடைய விருப்பு வெறுப்புக்களும், வழக்கபழக்கங்களும், வாழ்க்கை இயல்களும் அவருக்குத் தெரியும். தாம் தனித்திருக்கும் வேளையில் அவற்றைப்பற்றி ஒவ்வொன்றாகச் சிந்திப்பார். அவருடைய மனத்தைக் கவர்ந்தவை பல. அவற்றுள் ஒன்று மிகவும் முக்கியமானது.

## III

வெவ்வேறு வடிவங்களில் கடவுளை வழிபட்டு வந்தார்கள் மக்கள். அவனை ஆக்கல் கடவுளாகவும், காத்தற் கடவுளாகவும், அழித்தற் கடவுளாகவும் கண்டனர். ஆணுருவாகவும், பெண்ணுருவாகவும், ஆணுருவும் பெண்ணுருவும் கலந்த ஆணாகவும், பெண்ணாகவும், கடலில் வாழ்வோனாகவும், மலையில் வாழ்வோனாகவும், துயில்பவனாகவும், நடித்துக்கொண்டே இருப்பவனாகவும் இவ்வாறு

பலப்பலவாறு அவனைக் கற்பித்துக்கொண்டனர். ஆனால் உடலெடுத்துப் பிறந்து, தம்மோடு வளர்ந்து, தம்மோடு வாழ்ந்து தமக்கு அன்புடன் பணிபுரியும் ஒரு தெய்வத்தை அறியாது போயினர். மானிடப் பெண்ணே அவர் கண்ட அத் தெய்வம். வானுறை தெய்வங்களுக்கு வடிவமைத்து வழிபட்டுப் பழகிய மக்களுக்குப் பெண் வணக்கம் என்னும் புதியதொரு சமயத்தை அவர் நிறுவிய துணிவினை நாம் வியவாமலிருக்க முடியாது.

நாட்டிலே நிலவிய சமயங்களிடத்து அவருக்கு வெறுப்பில்லை. சமயங்கள் காரணமாக மக்கள் பிளவுபட்டுப்போகக் கூடாதென்பதே அவருடைய விருப்பம். அதனோடு பெண்ணின் பெருமையை யுணர்ந்தும் மனிதன் வாழவேண்டுமென்றும் அவர் அவாவினார். இனி, இவற்றையெல்லாம் கடந்து, கம்பரைப் போன்று சொந்தமானதொரு கொள்கையும் அவருக்கு இருந்தது. தாம் இயற்றும் காவியத்தை முடித்துக்கொண்டு நம்மிடம் விடைபெற்றுக் கொள்ளும்போது, இறுதிக் காதையில் இறுதி அடிகளில் அதனைச் சொல்கிறார் :

என்திறம் உரைத்த இமையோ ரிளங்கொடி
தன்திறம் உரைத்த தகைசால் நன்மொழி
தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்,
பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானம் செய்ம்மின் தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருள்மொழி நீங்கன்மின்

அறவோ ரவைக்களம் அகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை அஞ்சுமின் பிழையுயிர் ஓம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவ தொழியாது
செல்லும் தேளத்துக் குறுதுணை தேடுமின்
மல்லல்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென்.

கண்ணகி என்னும் கற்பரசியினுடைய கதை கேட்ட நல்லோர்களே, இங்ஙனம் நன்னெறியில் ஒழுகி உய்வீராக என்று உலகுக்கு உய்யும் வழி காட்டித் தம் நூலை இனிது முடிக்கின்றார் அடிகள். இந்தப் பதினாறு அடிகளிலும் அவர் வகுத்துச் சொல்லிய அவருடைய கொள்கையை நாம் மூன்று சிறிய வாக்கியங்களாகத் தொகுத்துக் கூறலாம். 'தெய்வம் உண்டு, பாவ புண்ணியம் உண்டு, வீடு உண்டு.'

பழந்தமிழ்மக்கள் கண்ட தெளிவுக்கும், கம்பர் கண்ட தெளிவுக்கும், அடிகள் கண்ட தெளிவுக்கும் வேறுபாடு இருக்கின்றதா? உண்மை காணும் உண்மைப் புலவர்களிடையே வேறுபாடு ஏது? மனிதன் காலத்தால் வேறுபடுகின்றான், உண்மை எக்காலத்திலும் வேறுபடுவதில்லை. அது கடவுள் தன்மை வாய்ந்தது. ஐந்து, பத்து நூற்றாண்டு களுக் கிடையே ஒவ்வொரு பெரியோர் தோன்றி அதனை மக்களுக்கு நினைப்பூட்டுகின்றனர். அந்தப் பெருமக்கள் இனத்தைச் சேர்ந்தவர் நம் அடிகள் என்பது சொல்ல வேண்டுவதில்லை. அவருக்கும் அவர் கண்ட உண்மையைப் போன்று இடம்,

காலம், சமயம் முதலிய வரம்புகள் இல்லை. உண்மைவாழுங் காலம் வரை அவரும் வாழ்வார். பொய்ம்மைகளையும் போலிகளையும் அகற்றி, உண்மைகண்டு, உண்மையோடு உண்மையாய்த் தமிழ்க்குலம் என்றும் வாழவேண்டும் என்று விழைந்தது அவர் உள்ளம். அவர் திருவுள்ளம் வாழ்க!

---

